இ - ள். வேங்கை பச்சைக்கயிற்றிலே கிளைத்த பொற்றாலிபோலேபூத்தன; அழிஞ்சில் வெண்டுகிலை நீளைத்தோய்த்து மேலேபோர்த்தாற்போலே தேனொழுகும படிபூத்தன; புன்கு செந்தலைய வெண்கறையவாகிய பொரிபோலேபூத்தன; இவற றைக்கூறில் இவைதாங் கண்ணிற்கார்ந்ததோர் கவின்கொணடனவென்க.

வெள்ளைமறுவை யுடையனவென்க. (௬௩)

கோடுதையாக்குழிசியோடாரங்கொளக்குயிற்றிய
வோடுதேர்க்கான்மலர்ந்தவகுளமுயாசண்பகங்
கூடுகோழிக்கொழுமுளரும்பினவங்கோசிக
வாடைபூத்தனபாதிரிவெண்கடம்புபந்தணிந்தவே.

குறட்டோடே யார்களழுந்தத் தைத்துச்செயத தேருருளை, மேற்கூடுவையாத தேருருளை.

இ - ள். மகிழ் தேருருளைபோலேபூத்தன; சண்பகங் கோழியிடததேகூடின முள்ளுப்போலேயரும்பின, பாதிரி கோசிகப்பட்டுப்போலே பூததன; வெணகடமபு பந்தணிந்தனவென்க. (௬௪)

வெருகுவேட்பச்சிரிப்பனபோன்முகைததமுல்லைவெய்யவா
ளரவுபைத்தாவித்தாங்கன்னகாநதளவிழ்ந்தலர்ந்தன
குரவங்கொண்டகுறும்பூழ்போறகொழுங்கான்முகைசுமந்தன
குருதிக்கூரெயிறுகூத்தியர்கட்கொண்டகொடித்தளவமே.

இ - ள். முல்லை வெருகுவிரும்பச்சிரிப்பனபோலே யரும்பின; குருதிககாநதள் பாம்பு படத்தைவிரித்துக் கொட்டாவிகொணடாலன்னவாக முகைநெகிழ்ந்து பின்பு அலர்ந்தன; குரவங் கையிலேபிடித்த குறும்பூழின் கால்போலே கொழுவிய முகை யைச்சுமந்தன; * தளவங் கூத்தியரிடத்துக கூரெயிறுபோலேயரும்பினவென்க.

கொடுமைதோன்றக் குருதிகூறினார் (௬௫)

சொன்னநன்மலருமல்லனவும்வீழ்பலவின்சூழ்சுளைகளு
நன்மைநூலினயந்தோன்றநன்பொன்விரலினுதியினும்
பன்மணியுமுத்தும்பவளமும்பைம்பொன்னுங்கோததாலொபப
வென்னவமரருமருளத்தொடுத்தானினமாலையே

இ - ள். மாலைகட்டுமாறுகூறிய நூலினயந்தோன்றத் தேவருமருள மணிமுதலி யனவற்றைக்கோத்தாற்போலே முற்கூறியமலர்களையும் ஒழிந்தவற்றையுஞ் சுளையை யுங்கொண்டு விரனுதியாலே ஒருவகைமாலையைக் கட்டினனென்க. (௬௬)

ஊனுண்சிங்கக்குழவியெயிற்றேரொளியெயிற்றினன்
றேனுன்போதிற்பிணையலும்பந்தும்புனைந்துதேனார்ந்த
நானந்தோய்த்துநறுங்கலவைநாறுமதநதெளிததபின்
பானுமொஞ்சொல்லாளோர்படிவிவன்டார்ப்பவந்திறைஞ்சினன்.

இ - ள். சிஙகக்குழவியின் எயிற்றையொக்குமெயிற்றினன், அவ்வகைமாலை

* தளவம - செம்முல்லை இதனைக குறிஞ்சிப்பாட்டுரையிற்காணக.

யொழியப் போதாலே ஒருமாலையையும் பந்தையும பின்னுங்கட்டி யிவற்றை யினி மைநிறைந்தபுழுகைத்தோய்த்து அவற்றினரும்புகளுக்குச் சந்தனத்தோடுகூடிய பனிநீரையும் புழுகையுந்தெளித்தபின்பு, பாலைப்போலத்தீவிதாகிய கூரிய சொல்லையுடையாள் ஒருதொழில்செய்யுங்குறளி வந்துவணங்கினளென்க.

ஓலைப்பாசுரமான மாலையைப் பிறரயிராதபடி யிவையுங் கூடக்கட்டினான். * "குஞ்சரம பெறுமே குழவிப பெயாககொடை" என்றதனுட்கொடையென்றதனாற சிங்கங் குழவியுங்கொணடவாறுகாணக. (கூஎ)

நெடியவாட்கண் கவ்வாயாவிமைப்பெனுஞ்சொல்லினமற்றெங
கொடியிற்கொததவிவையென்றுணம்பியுங்கொளகவென்றான்
வடுவும்வேலுமலருங்கயலுமவனபபழிததகன்
ணடியஞ்சிலமபினுட்குயததிறைஞ்சிக்காட்டவவள்கொண்டாள்.

இ - ள் அப்படுவி தன்கணகள்வாயாக இமைப்பென்னுஞ்சொல்லாலே இம்மாலைகளும் பந்துங கனகமாலைகுபபொருந்தினவென்றாள்; சீவகனுங்கொள்கவென்று கொடுத்தான், கொடுத்தபின்பு அவனைவணங்கி 'அவற்றைக்கொண்டுபோய் வடுமுதலியவற்றைக்கெடுத்த கண்ணிணையும் அடியிலேசிலமபையுமுடையாளுக்குக் காட்ட, அவளும் வாங்கிக்கொணடாளென்க.

படுவிகுறிப்பறிந்து கொடுததான். (கூஅ)

க. கொண்டுகோதைமலரெழுத்துமெல்விரலின்மேற்றாங்கிநோக்கும்
வண்டுசேர்ந்தகுழலாள்வருமுலைகள்பாயவண்டார்
விண்டுதேனறுளிபபவேற்றடங்கண்டாமாடுநாடகங
கணடுவாழாதவாவாழ்க்கையெல்லாஞ்சவரர்வாழ்க்கையே. (கூகூ)

உ ஆம்பலுறுமரககாபவளவாயாரமுதன்னா
பாமபுபைத்தாங்கனையபவளப்படவரவல்குலார்
. தாம்பலருமருட்டவகிறவழுந்தண்பூவணைக்
காம்புமெனறோள்கவின்வளரவைகல்கலப்பென்பவே. (க00)

ந. ஆகந்தானோர்மணிபபலகையாகமுலைகளாகப
போகக்கேற்றபுனைபவளவல்குல்கழகமாக
வேகவின்பககாமக்கவறுடலிசைவதன்றே
லாகநோற்றிட்டடங்கலாண்மைக்கழகென்பவே

இவைமூன்றுமொருதொடா

இ - ள் அம்மாலையைவாங்கிக்கொணடு விரன்மேலேதாங்கி மலராகியவெழுத்தைவாசிக்குங்குழலாள், அரககாம்பல்போல நாறும்பவளவாயார், அமுதன்னார், பாம்பின்படமனைய வல்குலாராகிய மகளிர்தாம் பலருமாடுநாடகங்களைக்கண்டு 'வாழாதவர் வாழும்வாழ்வெல்லாம் மக்கட்பிறப்பிற்பிறந்தும் நன்குநுகராத வேடரதுவாழ்வாயிருக்கும், அதுவேயன்றி அவரைக்கலககுமிடத்து வேற்றடங்கண் டாம் பாம்புபைத்தாங்கு மருட்ட வளவியதார் தேன்றுளிக்கும்படி வருமுலைகள்பாய அவர்தோள் கவின்வளர

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், கக.

அணையிலேதங்குதல் கலப்பென்றுகூறுவா, அங்ஙனங்கலந்து தனதாகம்பலகையாக அவர்முலைகள்நாயாக வல்குல் சூதுபொருமிடமாக இணையில்லாதவின்பத்தையுடைய காமமாகியகவருடல் கூடாதாயின், இவையெல்லாம் மேலுண்டாம்படி தவஞ்செய தடங்குதல் ஆணமைக்கழகென்றுகூறுவாரென்று வாசித்தாளென்க.

குழலாள்வாசித்தாளென்க விடமேறினறபோலே மருட்ட நாடகம்-அவாவழி கரிக்கிறநிலைமை (௧0௪)

வேறு.

பின்னிவிட்டபிடித்தடக்கையிரண்டுபோன்றுதிரண்டழகார
கன்னிக்கலிங்கமகிலார்ந்துகவவிக்கிடந்தகுறங்கிணுண்
மின்னுக்குழையும்பொற்றோடுமிளிரவெருத்தமிடங்கோட்டி
யென்னுமிமையாணினைந்திருந்தாளியக்கியிருந்தவெழிலொத்தாள

இ - ள். முறைமைப்படநோக்கி யிடைவெளியின்றி யிருத்தலிற பிடியினுடைய சோத்துவிட்ட கையிரணடையொத்தத தாந்திரள்வதுஞ்செய்து கணவன் றீண்டாத கலிங்கம் விரும்பிககிடந்த குறஙகினுள், அங்ஙனம்வாசிததுக் குழையுந் தோடும்பிறழக் கழுத்தையிடததேசாய்த்துச சிறிதுமிமையாளாய அவனிடததுப புணர்ச்சியை நினைந்திருந்தவள இயககியிருந்த வழகையொததாளெனக.

இயக்கியுந தனககுமேலாமிறைவனைத் தியானிதது இமையாதிருபபா ளென்றுணர்க. (௧0௨)

கொடுவெஞ்சிலையைக்கொளையமைத்துக்கொதிநீாப்பகழிகொளவாஙகி
கடுவெங்குறவனெயப்பட்டகன்னிப்பிணையினிலைகலங்கித் [க்
தொடித்தோளடப்பத்தோடேம்பத்துணைவெம்முலைகளபசப்பூர
நெடுமாத்தோகைமென்சாயனெஞ்சிற்கிவ்வாறுரைக்கின்றாள

இ - ள். அங்ஙனமிருந்த பெரிய மயில்போலுஞ் சாயலையுடையாள் வில்லைநாணேறிட்டு அம்பைநிரமபவலித்துக் குறவனெயயப்பட்ட கன்னிபபிணையினிலையைத தப்பித் தொடி தோளில் நின்றும் விழும்படி தோண்மெலியாநிறக, முலைகள பசபபூரா நிற்க நெஞ்சிற்கு இப்படிக கூறாநின்றாளென்க

நிலையைத் தபபுதல-இறநதுபாடு நீஙகுதல. மாலையைத தன்சேடிகொணடுவருதலின், அவற்கு நிகழ்ந்தவேட்கைதனனிடத்தேயென்றுகருதி இறந்துபாடுநீங்கினாள். பிணைபோலென்றால மேல்வருத்தமினறி யிறந்துபாடுதோன்றுமாம. (௧0௩)

ஒன்றேயெயிற்றதொருபெரும்பேயுலகம்விழுங்கவங்காந்து
நின்றாற்போலநிழலுமிழ்ந்துநெடுவெண்டிங்களெயிறிலங்க
வின்றேகுருதிவானவாயஙகாந்தென்னைவிழுங்குவா
னன்றேவந்ததிம்மாலையுளியேனுவியாதாங்கொல்.

ஏ - அசை.

இ - ள் ஒரெயிற்றையுடையதொரு பெருமபேய் உலகத்தை விழுஙகும்படி வாயையங்காந்து நின்றாற்போலே இம்மாலை திங்களாகியவெயிறு நிழலுமிழ்ந்திலங

நீ செக்கர்வானாகிய வாயையங்காந்து என்னை யின்றேவிழுங்குதற்கு வந்துற்றதல்லவோ, இனி யென்றுவி இதன்கணணதோ, என்கணணதோ, அறிகிலேனென்றாளென்க.

வந்ததென வினாவுபற்றி எதிர்காலததை இறந்தகாலத்தாற் கூறினாள். (௧௦௪)

வருந்தியின்றுணமறந்தொழிந்தாள் வளர்ந்தாள்சொற்கேட்டில்கடிநதா
முருந்தின்காறுங்கூழையைமுனிவாரினையெனமுனிவார [ன்
பொருந்திறமன்றுலிதுவெனவும்பொன்றுமளித்திவ்வுயிரென்னுய்
திருந்துசோலைக்கருங்குயிலேசிலம்பவிருந்துகூவுதியால்.

இ - ள். நல்ல சோலையிற்குயிலே! நீயருள்செய்து மாலைவருகின்றகாலத்தே யாங்கூவுதல பிரிந்தவிவாக்குப பொருந்திற றன்றெனறுங கருதாயாய் இவருயிதான போமென்றுங் கருதாயாய முழங்கவிருந்து கூவாநின்றய, இத்தன்மையையுடைய நின்னை வருந்திபெறறவள அவவருததத்தையுமறநது உறவைக்கைவிட்டாள, எடுததுவளாததவளும் நினசொலலினகடுமையால இலலினின்றுங கடிநதாள்; நீதான் என்பளவுஞசெலலும மயிாபபாடுமுடையை, ஆதலின, இனி நின்னைவெறுபபா நின்பிறப்பையோ, வளாபபையோ, வடிவையோ வெறுபபாரென்றுளென்க.

கருங்குயிலேயென்றது சோலைககு மறுவேயெனறதன்மைநது இது சொல்லின்கட் டிணைமயககம (௧௦௫)

பெருவெண்டிஙகண் மாலகபபூமலைந்துபெட் பநகுகின்ற
துருவுகொண்டகுரலன்றிலுயிாமேலாமபலுலாய்நிமிரு
மொருபெண் பாலேன்யானாகவுலகமெல்லாம்பகையாகி
யெரிகொன்றீன்றவிலைபபலிபோலிருகதியாலென்னின்னுயிரே.

அகபபூ - இதயகமலம்.

இ - ள. அன்றில்கள் தஙகுரலாலே வடிவைக்கொணடன, திங்கள் அகப்பூவோடே மலைந்து அதன்கேடுகணடு மிகவும் நகாநின்றது; ஆம்பலென்னும்பண் சுற்றிலேயுலாவி இவ்வுயிரின்கேடுகணடு இதனமேலே நடவாநின்றது; இங்ஙனம் உலகிலுள்ள பொருளெல்லாம் பகையாகுதறகுப பறறுதே யானொரு பெண்பாலேனு யிருந்தேனென்றுட்கொணடு யானிங்ஙனமாகவுங் கொடியவுயிரே! நீ தீமேய்ந்து வேறோர் வடிவாகவீன்ற இலைசசாமபல்போலே யிராநின்றய், நீயிருககுமளவன்றல்; நினக்கு நினைவு என்னென்றுளென்க.

உலகு - ஆகுபெயா ஆகி - ஆக பின்னும் இலை போறலின், ஈன்றவென்றார். இது தொழிலுவமம் (௧௦௬)

வேமென்னெஞ்சமெய்வெதும்பும்விடுக்குமாவிவெய்துயிர்க்கும்
பூமென்குழலாாபுறநோக்கிககுவார்ககுவதாயினேன்
றமமார்பன்றன்புனைந்ததண்ணென்மாலைபுணையாக
யாமக்கடலைநீந்துவேன்யாருமில்லாத்தமியேனே

ஏகாரம் — எதிர்மறை.

இ - ள். காமத்தீயால் நெஞ்சுவேகவின், மெய் வெதும்பாநின்றது; உடம்பைக் கைவிடுகின்ற ஆவியும் போகாதே நின்று நெட்டுயிாப்புக் கொள்ளாநின்றது; யானும்

மகளிருடைய பொல்லாங்கைப்பார்த்து நகுவார் நகப்படும் பொல்லாங்கின் வடிவாயி னேன்; இங்ஙனமாகிய தமியேன் மாலைபுனையாக யாமமாகிய கடலைநீந்துவேன்; நீந்துதலரிதென்றாளென்க.

அவன்கையாற் புனைதலின் அதுகொண்டுநீந்தலாமோவென நினைத்து அதனை மறுத்தாள். (௧௦௭)

செம்பொற்கடம்பன்செவ்வேலுங்காமன்சிலையிற்றொடுத்தலர்ந்த
வம்புமவென்றவரிநெடுங்கண்ணம்மாமதிவாண்முகத்தினாள்
கொம்புபூத்துமுருகுலாய்த்தேன்கொப்புளித்துநின்றதோர்
வெம்புவெந்தீயிடைப்பட்டதொத்தாளவிளைசெய்கோதையே.

இ - ள். முருகன்வேலையுங் காமனம்பையும்வென்ற கண்ணினையுடைய முகத்தினளாகிய கோதை, பூத்தலான் மணந்தங்கித் தேனைக்கொப்புளித்து நின்றதோர் கொம்பு தீயிடைப்பட்ட தொத்தாளென்க. (௧௦௮)

வேறு

மணிநிறமாமைமாயலவளையொடுவண்டுமூசு
மணிநிறப்போர்வையாயவருமபெறனலனும்விற்றுப்
பணிநலம்புதியதுண்டான்பன்மலர்மாலைகொண்டேன்
பிணிநிறப்புறஞ்சொலென்னும்பெருமிஞிறார்ப்பவென்றாள்.

இ - ள். நீலமணிபோலும் மாமையினையும், மென்மையையும், வளையையும், மகளிர்க்குப் போர்வையாகிய நாணையுங்கொடுத்து எல்லாருந்தாழ்கின்ற என்னலத்தைப் புதுமையையுண்டானது வண்டுமூசுமாலையை, நோயைநிறமாகவுடைய புறஞ்சொலென்னும் மிஞிறார்ப்பக் கொண்டேனென்றாளென்க. (௧௦௯)

காதலான்காதல்போலவகன்றுநீண்டலர்ந்தவாட்கட்
போதுலாங்கோதைமாதர்புனைந்தலர்தொடுத்தமாலை
யாதலாலலரதாகாதொழியுமேயழுங்கலென்று
மாதுலாமழலைச்செவ்வாய்மடக்கிளிமொழிந்ததன்றே.

இ - ள். நின்கணவனது காதலைபோலே அகன்று நீண்டு மலர்ந்த கண்ணையுங் கோதையையுமுடைய மாதரே! இஃது அலராற்புனைந்து தொடுத்த மாலையாதலின், அலரிடத்ததாகாதேபோமோ, இனி வருந்தாதொழியென்று கிளி யாற்றுவித்ததென்க. (௧௧௦)

வேறு

என்னையுள்ளம்பிணித்தென்னலங்கவர்ந்தவீர்ந்தாரினான்
றன்னையானும்பிணிப்பேனெனத்தண்மணிச்செப்பினுண்
மன்னுமாலைகொடுத்தவனுக்குய்த்திடெனத்தொழுதுகொண்
டன்னமென்னவொதுங்கிச்சிலம்பரற்றச்சென்றணுகினாள்.

இ - ள். என்மனத்தை யிறுகப்பிணித்து என்னலத்தையுங்கொண்ட தாரினான் றன்னை யானும் அங்ஙனம பிணிப்பேனென்று கருதி, மறதைநாள் தன்செப்பின

மாலையை யநங்கவிலாசினி கையிலேகொடுத்துக் கொண்டுபோய் அவனுக்குக்கொடு வென, அவளுந் தொழுது வாங்கிக்கொண்டு சென்று அவனையணுகினளென்க.(கககு)

அணுகிமுன்னின்றவநங்கவிலாசினியங்கைகூப்பிப
பிணையனீட்டப்பெருந்தகையஃதேலான்முகநோக்கலுந
துணையிற்றோகையென்னங்கைக்குத்தொங்கற்றொடுப்பாயுநீ
மணிசெய்மென்றோண்மருந்துநீயாருயிருநீயேயென்றாள்.

இ - ள். அங்ஙனமணுகி முன்னேநின்ற அநங்கவிலாசினி தொழுது மாலையைக்கொடுக்க, அதனை யவன்வாங்காதே அவளைப்பார்த்தவளவிலே, அவளும் ஒப்பில்லாதமயிலாகிய என்னங்கைக்குத் தொங்கல் தொடுப்பாயுநீயே, தோண்மெலிவுக்கு மருந்தும் நீயே; உயிருநீயே, ஆதலின், இதனை வாங்கிக்கொள்ளெனறாளென்க.(ககஉ)

வேறு.

மன்னர்கோயிலுறைவாரபொறிசெறித்தமாண்பினரே
யென்னவஞ்சினையென்றவனைநக்காட்கஃதன்றுகோதா
யின்னகொள்கையெறகேலாதெனனவிலங்கெயிறறினாள்
என்னமன்னநடையினாடான்வருந்துமெனநோந்தான

இ - ள். அதுகேட்டவன் அரசாகோயிலிற்றங்குவார ஐம்பொறியையு மடக்குவாரே, இதுதகாதுகாணென்றாகை, நீயஞ்சினையென்று அவனையிகழ்ந்தவளுக்கு, அவன் பின்னும் கோதாய்! அதுவன்று; ஆசிரியனாய் நிற்கின்ற தன்மையேனுக்கு இதுபொருந்தாதுகாணென்றானாக, அவளுங் கனகமாலை யிறந்துபடும் இதுவாங்காதொழியி னென்றுகூற, அதற்கஞ்சி நோந்தானென்க (ககங)

குலிகமார்ந்தகொழுந்தாமரையன்னவண்கைநீட்டி
யொலியலேற்றானிஃதூழ்வினையாலுளளஞ்சுடுமாலென்ன
விலைகொள்பைம்பூணிளமுலையாளபோகிக்கனகமாலை
மெலியவெம்பிநைகின்றாளுய்யும்வகைதொடங்கினாள.

இ - ள். அஙஙனநோந்து தாமரையன்ன கையைநீட்டி மாலையைவாங்கினான்; வாங்கி உழுவலன்பாலே இதுதான் என்னுள்ளத்தைச் சுடாநின்றதென்றானாக, அது கேட்டபின், அநங்கவிலாசினிபோய், கனகமாலைவருந்துகின்றவள் பிழைக்குமுபாயத் தைச் செய்யத்தொடங்கினாளென்க (ககச)

நீர்செய்காநதமணிகூநதளம்பாவைநீண்டழகிய
வோசெய்சாந்திற்கழுநீரவிரைகமழும்பூக்கள்கோத்த
வார்செய்தண்டாமரைவளையமைவரையின்வெள்ளருவிநீர்
சீர்செய்கோமகளைச்சேர்த்தினள்சீதஞ்செய்யாதுடைந்தனவே.

இ - ள். சாந்தோடே சந்திரகாந்தக்கல்லையும், நீண்டு அழகிய கூந்தளம்பாவையையும், கழுநீரையும், ஒழிந்தபூக்களையும, கோத்த நெடிய தாமரைவளையத்தையும், அருவி நீரையும் கோமகளையணிவித்தாள்; அவை குளிர்ச்சிசெய்யாதே கொதித்தன வென்க.

கூந்தளம்பாவை - பூவிசேடம. (ககரு)

பவ்வத்தங்கட்பிறந்துபனிபெயாக்குந்தண்ணூற்றதாகி
யெவ்வமன்னர்படவுலகம்விற்குமருமணியினைச்
செவ்வனூலிற்சிந்திரிக்கப்பட்டதனைச்சேர்த்திப்பின்னு
மவ்வனூறுங்குழலாட்குமற்றுமிவைகணுடினாள்.

ஊறு - பரிசம்.

இ - ள். கடலிலேபிறந்து பனியைக்கெடுக்கு குளிர்ந்த ஊறறையுடையதாய மன்னர் வருத்தமுறும்படி உலகைவிற்குமுதலை நூலிற்கோக்கப்பட்டதனைப் பின்னு மணிந்து குழலாட்கு வேறும் இப்பரிகாரங்களை நாடினாளென்க. (கககூ)

களிசெய்கோசிகநீர்விழுக்கடிமாலைமேறரொடர்ந்துகீழ்
களிசெய்தண்பூஞ்சலசயனமாக்கிநன்னீர்பிலிற்றும்வாய்
குளிர்கொள்சாந்தாற்றிபொன்னாலவட்டங்கொண்டேந்திவீசச
சளிகொள்சந்திறகொழுஞ்சாந்தமாகமுழுதுமெழுகினாள்.

இ - ள். மேலேகட்டி நீரைததாங்கிநின்ற கஞ்சிதோய்த்த கோசிகப்பட்டின்நீ மாலையாலே வந்துவிழும்படி மாலையைச் சூழக்கட்டிக் கீழேசெறிவுசெய்த பூவையு டைய நீரிலே படுக்கையாக்கி நீரைபபிலிற்றும்வாயையுடைய சாநதாற்றி ஆலவட்ட மென்கின்றவற்றை ஏந்திக்கொணடு வீசாநிற்க, குளிர்கொண்ட சந்தனக்குழம்பைப பூசினாளென்க. (ககஎ)

கொம்மைவெம்முலையிற்சாநதஙகுளிர்செயாதாவிவாட்ட
வம்மென்மாலைமுகஙகரியநீர்துளும்பநின்றுநீடி
வெம்மைமிககதுவீரன்றொடுத்தவிளங்குமாலை
பொம்மலோதிககுததானே துணையாம்புணையாயிறறே.

இ - ள். இளையமுலையிற் சந்தனங கொதிததது உயிரைக்கெடுக்க, சுற்றினமாலை கருக, கீழ்நின்றநீர் வெம்மையாறகொதித்தெழ நீட்டித்துநின்று வெம்மைமிக்கது, அப்பொழுது வீரன்கட்டினமாலைதானே ஒதிக்குத் துணையாவதோர தெப்பமாயிற றென்க. (ககஅ)

வாசநீலங்கழுநீர்குவளைபடைசாற்றிவந்
தோசனைக்கணுடையுநெடுஙகடகனகமாலை
தாசிதூதாகத்தாமம்புணையாகச்செல்லுநாளுட
காசில்கல்விக்கடலைக்கரைகண்டார்காளைமாரே.

இ - ள். நீலப்பூமுதலியன போர்கூறிவந்து ஓரோசனைநீளத்தே யுடையும் நெடுங்கண்ணையுடைய கனகமாலை, தனககு அநங்கவிலாசினிதூதாக, மாலைதெபப மாக நடக்கின்றநாளிலே, விசயன்முதலாயினார் கல்விக்கடலைக் கரைகணடாரென்க ()

வேறு.

பொருசரஞ்சலாகைவெய்யபுகன்றனர்துரக்குமாறும்
வருகணைவிலக்குமாறும்வளரமர்நீந்துமாறுங
கருவியுட்கரக்குமாறுங்கணைபுறஙகாணுமாறும்
விரியமற்றவர்க்குக்காட்டவீற்றிருந்தவருங்கம்றா.

இ - ள். வெய்யசாத்தையும இருபபுராசத்தையும் விரும்பியெய்யுமாறும், தம் மேல்வருமம்பை அம்பாலேவிலக்குமாறும், அமரிலே கொள்ளுநிலமறிந்துகொள்ளு மாறும், எய்தாற் கருவியாலேமறைத்துச சேமஞ்செய்யுமாறும், சேர்ந்தாற் பகைவா கணை புறமாக்கித் தங்கணைசெலுத்துமாறும் அவர்க்குவிரியக்காட்ட, அவரும் வருத்த மின்றிக் கற்றாரென்க.

எனவே "தொடையும் விலக்குஞ செலவுஞ் சேமமுந் - தவிர்த்துவினை செயனு மெனவை வினையாம்" இவற்றை வடநூலார்பஞ்சகிருதியமென்பர்; இவை தலைமை பற்றி வில்லையேகூறினவேனும் படைக்கலங்கட்கெல்லாம் பொது (கஉ0)

வேலுடைத்தடகையாாகள்வேழமேற்சென்றபோழ்திற்
காலிடைக்கரக்குமாறுங்கையிடைத்திரியுமாறும
வாலிடைமறியுமாறுமருப்பிடைக்குளிக்குமாறு
நூலிடைக்கிடந்தவாறேநுனித்தவன்கொடுக்கக்கொண்டார.

இ - ள். தம்மேலே வேழஞ்சென்றபொழுது அதன்காலிடையிலேபுகுந்து மறை யும்படியையும், அது கையாலேவளைத்தபொழுது அதன்கைக்கு நடுவே யுடம்பு பிறழும்படியையும், அது தாலவட்டத்தாலே வீசினால் அதுபடாதபடி போய் அதன் காலிடையிற்புகுதுமபடியையும், அது கோறற்கிறங்கினாற் கொமபிரண்டிற்குநடுவே யாம்படியையுங் கூரிதாகக்கற்றவன், அத்தொழிலை அந்நூலிற்கிடந்தபடியேகற்பிக்க, அததடக்கையார்களுங் கற்றாரென்க.

இது தனித்து யானையுடன் போர்செய்யுமாறுகூறிற்று. (கஉக)

கொடிநெடுந்தேரின்போருங்குஞ்சரங்குறித்தபோருங்
கடுநடைப்புரவிப்போருங்காப்பறக்கற்றுமுற்றி
யிடனறிந்திலங்கும்வைவாளிருஞசிலைகுந்தமூன்று
முடனறிந்தும்பரார்க்குமுரைப்பருந்தகையாரானா.

இ - ள். தோாற் பொரக்கருதினபோரையும், குஞ்சரத்தாற் பொரக்கருதின போரையும், புரவியாற்பொரக்கருதின போரையும் வெளியாகக்கற்றுத் தழும்பி யிருந்து, இவ்வூர்திகளிலிருந்தால்ஒன்றற்கொன்றுமாறறிந்து வினைசெய்யுமிடமறிந்து, செலுத்தும்பொழுது இலஙகும வில்லும், எறிகோலும், வாளுமென்கின்ற மூன்றை யுஞ் சேரவறிந்து, மேலாயநிலத்திற்றேவாக்கும்புகழ்தற்கரிய தகையராயினாரென்க.()

தானையுளன்றிநின்றதனியிடமொற்றிமன்னா
தானைமேறசென்றபோழ்தும்வென்றியிற்றளர்தலின்றித்
தானையையுடைக்கும்வெம்போர்ததருக்கினாமைந்தரொன்று
தானைசூழ்மன்னற்குய்த்தார்மன்னனுந்தருகவென்றான்.

இ - ள். தாம் படையினுளன்றித் தனியேநின்றவிடத்தையெய்த்துப் பகைவர் படை மேற்சென்றகாலத்தும் வெற்றியிற்றளருந்தன்மையின்றி அப்படையைக்கெடுக் கும் போர்த்தொழிலிலே பிள்ளைகள் மிகுத்தாரென்று தடமித்தனுக்குச்சொன்னார்; அவனும் யாங்காணும்படி அவரைக் கொணாகவென்றானென்க. (கஉஉ)

மழையொடுசூழ்ந்துகொண்டமான்றுகள்சிலையினீக்கிக்
குழைமுகநெற்றிநக்கக்கோலவிற்பகழிவாங்கி
யிழைபகவிமைப்பினெய்திட்டெறிந்துமின்றிரிவவேபோல்
விழைவுறுகுமரார்புக்குச்சாரியைவியத்தராஞர்.

சூழ்ந்துகொண்ட மழையையுந் தூளியையும் வில்லாலேநீக்குதல் - சரகூடங் கட்டி அதனால் விலக்கிக்காட்டுதல். அத்திரங்கற்றதன்மையையும், பயன்கொண்ட தன்மையையும் இத்தொடர்நிலைச்செய்யுளுட் கூறுமையின், நெருப்புநீருமாகிய அத்திரங்களைவிட்டானென்றல் பொருந்தாது. விசயன் காண்டாவனமெரித்ததுஞ் சரகூடங்கட்டியென்றுணர்க

இ - ள். குமரர், சரகூடங்கட்டிய பின்பு குழையைநக்கும்படி அவ்வில்லைவலித் துப் பகழியாலே நூல்பிளக்கவெய்து வாளாலேநூலபிளக்கவெட்டி வேலாலேநூல் பிளக்கவெறிந்து பின்னும் மின்றிரியுமாறுபோலச் சாரியைதிரியுந் தொழிலிலேபுக்கு வியக்கத்தக்காராயினாரென்க.

மழைகூறவே புயமுட்டியும், துகள்கூறவே சிரோமுட்டியும், குழைநெற்றிநக்க வாங்கியெனவே கந்தரமுட்டியுங்கூறினா; மேனோக்கியுங் கீழ்நோக்கியும் நேருமே யெய்தலாம். (௩௨௪)

விசயனேவிசயனவிற்போாக்கதம்பனேமுருகன்வேறபோர்த்
திசையெலாம்வணக்கும்வாட்போர்க்கந்தணன்செம்பொனும
னசைவிலான்யானைத்தேர்ப்போரககசலனேயசலகீர்த்தி
வசையிலன்புரவிச்சேனென்றியாவரும்புகழப்பட்டார்.

இ - ள். விற்போருக்கு விசயன் அருச்சுனனே, வேற்போருக்குக் கதம்பன் முருகனே, வாட்போருக்குத் திசையெல்லாம்வணக்கும் கனகன் பரசுராமனே, யானைப்போருக்குந் தேர்ப்போருக்கும் அசலகீர்த்தி அசைவிலாஞகிய அசலனென் னும்வீரனே, புரவிக்குச் சேனன வசையில்லாதவனேயென்று இவ்வைவரும் எல லாராலும் புகழப்பட்டாரென்க

வசையிலனென்றது நகுலனை. (௩௨௫)

காவலன்மககளாக்கங்கண்டுகண்குளிாநதுநோக்கி
யேவலானரசனென்றேவிருபிறப்பாளனல்லார்க்
காவதன்றின்னமாடசியவனையாணிகளம்பெய்து
காவல்செய்திடுவல்வல்லேகாளையைக்கொணாமினென்றான்.

இ - ள். அரசன் மக்கள்கல்வியைக்கண்டு மகிழ்ந்துநோக்கி, அந்தவேலான் ஒன்று அரசனாதல், ஒன்று அந்தணனாதலாம்; இரண்டுமொழிந்த சாதியிலுள்ளார்க்கு இகக்கல்வியுண்டாகாது; ஆதலால் அவனை யான் நீங்காததோர் தளையையிட்டுச் சிறை செய்வேன்; இப்பொழுதே யவனைக் கொணாமினென்றானென்க.

நிகளம் - மகட்கொடுத்தல். (௩௨௬)

கல்வியுங்கொடிதுபோலுங்காவலன்காளை தன்னை
யொல்லலன்சிறைசெய்கின்றானென்றவன்கருதிற்றோரா

பல்சனம்பரிந்துநிற்பபார்த்திபகுமரன்சேர்ந்தான்
வில்வலாழ்கொண்டுவேந்தன்வேறிருந்திதனைச்சொன்னான்.

இ - ள் அரசன் இக்கல்வியுடையகாளைதன்னைப் பொறானாய்ச் சிறைசெய்யா நின்றானாதலாற் கல்வியுங் கொடிதுபோலேயிருந்ததென்றுகருதி, அவனினைத்ததறியாராய், பலரும் வருந்திநிற்கின்றவளவிலே, சீவகன் சென்றான்; அங்ஙனஞ்சென்றவனை அவ்வரசன் வேறேகொண்டிருந்து இவ்வார்த்தையைக் கூறினானென்க. ()

புண்முழுதிறைஞ்சுங்கோடடுப்பொருகளிறனையதோன்றன்
மண்முழுதன்றிவானும்வந்துகைகூடத்தந்தாய்
கண்முழுதுடம்பிற்பெற்றேன்காளைகைம்மாறுகாணேன்
பண்முழுதுடற்றுந்தீஞ்சொற்பாவைநின்பாலளென்றான்

பறவைகளெல்லாம்படியுங் கோட்டையுடைய களிறு. இவர்க்கு நீகொற்றங் கொடுத்தலின், மண்முழுதும்வந்துகைகூடுதலன்றி மறுமையின் வானுமவந்து கைகூடும்படி ஞானநெறியையுந்தந்தாய; நல்வினைசெய்தாருடம்பிற்கண்முழுதும் யான் பெற்றேனென்றது - இவர்போர்த்தொழில் காணப்பெறுதலின் ஊனக்கண்ணும், இவனை நன்னெறியைச சோவித்தலின் ஞானக்கண்ணும் பெற்றேனென்றவாறு

இ - ள். தோன்றல்! தந்தாய்; யானும்பெற்றேன், ஆதலிற் காளாய்! கைம்மாறு காணேன்; என்பாவை நின்பாலளாகின்ற இவ்வளவே கைம்மாறென்றானென்க

இனி வியந்துகூறுகின்றவன் மணணும்விண்ணும் கைகூடத்தந்தாய்; யானும் உடம்பெல்லாங் கண்பெற்றேனென்றுமாம். இந்திரனானேனென்றுமாம். (௧௨௮)

முடிகெழுமன்னன்சொல்லமொய்கொள்வேற்குரிசிறேற்றான்
வடிவமைமனனென்றாகவாயொன்றாமறுத்தலோடுந்
தடிசுவைத்தொளிறும்வேலான்றன்கையான்முன்கைபற்றி
யிடிமுரசனையசொல்லாலிற்றெனவிளம்புகின்றான்.

இ - ள் அங்ஙனமரசன்கூற, குரிசில், தனகருத்தைத் தெளிவியானாய் அவள் வடிவுபொறித்துக்கிடக்கின்ற மனம் வேட்கைசெல்லாநிற்க வார்த்தை வேட்கையின்றாக மறுத்தவளவிலே, அவ்வரசன் றன்கையாலே அவன்கையைப்பிடித்து இத் தன்மைத்தென்று ஒருமொழிகூறாநின்றானென்க

வடியமை பாடமாயின், ஆராய்ச்சியமைந்தவென்க (௧௨௯)

பூவியல்கோயில்கொண்டபொன்னனாளனையநங்கை
காவியங்கண்ணிவந்துபிறத்தலுங்கணிகளீண்டி
மூவியறிரிதலின்றிச்சாதகமுறையிற்செய்தா
ரேவியல்சிலையினாய்க்கேயுரியளென்றுரைப்பநேர்ந்தான்.

இ - ள். அவ்வரசன் திருவையொத்த நங்கையாகிய கண்ணி பிறந்தவளவிலே, கணிகளீண்டி யுதயாருடக்கவிப்புகளிற் றப்பின்றாகச் சாதகத்தை நினக்கேயுரிய முறைமையாற் செய்தாராதலின், நினக்கேயிவளுரியளென்றுகூற, அவனும் நேர்ந்தானென்க.

கலைகளும் வடிவுமுதலியனவும் உடையவனொருவனென்றலின், இவனேயா யிற்று. (கூ௰)

வாருலாமுலையினாட்கும்வரிசிலைத்தடக்கையாற்குஞ்
சீருலாங்கோலஞ்செய்தார்செப்பினார்வதுவைநன்னாட்
பாரெலாமறியநின்றுபடாமுரசார்ப்பத்தீவேட்
டேருலாங்கோதையின்பத்திளநலம்பருகுகின்றான்.

இ-ள். முலையினாட்குந் தடக்கையாற்கும மணஞ்செயயு நாட் செப்பினார்; செப்பி மணக்கோலஞ்செய்தார்; செய்தபின்பு ஒலியவியா முரசார்ப்பத் தீயிலே யாகுதிபண்ணி அவன் அக்கோதைநலத்தைப் பருகாநின்றானென்க. (கூக)

மோட்டிளங்குரும்பையன்னமுலைக்கடாக்களிறுமுதகஞ்
சூட்டியவோடைபொங்கநாணெனுந்தோட்டிமாற்றி
யாட்டியசாந்தமென்னுமுகபடாமழித்துவெம்போ
ரோட்டறவோட்டிப்பைந்தாருழக்கியிட்டுவந்தவன்றே.

பெரிய இளங்குரும்பை வடிவிற்குவமை.

இ-ள். அவன் பருகுகின்றபொழுது அவண்முலையாகியயானைகள், சூட்டிய முத்தமாலையாகிய பட்டமசையாநிற்க நாணென்னுந் தோட்டியைக்கெடுத்துச் சாந்த மென்னு முகபடாத்தையழித்து விரும்பினமுயக்கத்தில் உறுதவிடமில்லையென்னும் படி மாறிடமெங்குமுறுவித்து மாலையையுழக்கிப்போகட்டு மகிழ்ந்தனவென்க.

கொடியபோரை யினிக்கேடில்லையென்னும்படி கெடுத்துத் தூசியையுழக்கி யென்றுங் கொள்க. (கூஉ)

ஒண்மணிக்குழைவில்வீசவொளிர்ந்துபொன்னோலைமின்ன
வண்ணமேகலைகளார்ப்பவான்சிலம்பொலிப்பமுதது
கண்ணியும்பசும்பொனூணுங்கதிர்முலைபுடைப்பக்காம
ரண்ணலங்குமரன்றன்னோடாயிழையாடினாளே.

குமரனோடு ஆயிழையாடினாளெனவே * ஒருவினையொடுச்சொலுயர்பின்வழித தாய் இருவருமாடினாரென்பதுபடநின்றது. எனவே யவன் மேகலையார்ப்பச் சிலம் பொலிப்பவாடினானென்றும், அவள்வீச மின்னப்புடைப்ப வாடினாளென்றுங்கொள்க; இவன்காட்டக் கண்டாளெனவேண்டுதலின். (கூங)

மூசுதேன்வாரியல்கும்பட்டபின்முலைகளென்னு
மாசறுகந்தின்மென்றோண்மணித்தொடர்கொளுத்திவாடக
ஞாசறுவயிரதோட்டிநுதலணிந்தமுதச்செவ்வாய்
காசறுகவளமாகக்களிறுகோட்பட்டதன்றே.

போகாமல்வளைத்தலிற் கண்டோட்டியாயிற்று. அதற்கேற்ப நுதலணிந்தென்றா. கூடநிமிராமைக்கு வயிரமென்றார்.

---

* ஒருவினை யொடுச்சொ லுயர்பின் வழித்தே. இது தொல்காப்பியம், சொல்லதிகாரம், வேற்றுமைமயங்கியல், அ.

இ - ள். சீவகனாகியகளிறு, செவ்வாய்கவளமாக வல்குலாகியகூடத்தே அகப்பட்டபின்பு, தன்முலைகளென்னுங் கம்பத்திலே தோளாகியசங்கிலியாலேபூட்டிக் கண்ணாகியதோட்டியை நுதலிலேயணிந்து இங்ஙனந் தப்பாமற் பிணிக்கப்பட்டதென்க. (௧௬௪)

ஒப்பிணை தனக்கிலா தானுறுவரையகலமூழ்கிச்
செப்பிணையனையசெங்கேழ்வனமுலைபொருதுசேப்பக்
கற்பகமரத்தைப்புல்லிக்கைவிடாதொழிந்துகாமத்
துப்புரவுமிழுங்காமவல்லியின்றோற்றமொத்தாள்.

இ - ள். தனக்கு இணைக்குமொப்பிலாதானகலத்தே தன்முலைகள் சிவக்கும்படி பொருதழுழ்கப்பட்டுத் தான் வல்லியின்றோற்றத்தையொத்தாளென்க.

கற்பகத்தைக் கைவிடாதேபுல்லித தங்கி அதற்குத் துப்புரவைககொடுப்பதோர் வல்லி - இல்பொருளுவமை. (௧௬௫)

காய்வுறுவேட்கைதன்னாற்கயருலும்பகலும்விளோன்
வேய்வெறுத்தமைந்ததோளாள்விழுத்திரையமுதமென்று
சேய்நலங்கடந்தசெல்வன்றிருநலநெளிததிட்டாற்ற
வாய்விடாள்பருகியிட்டாண்மடக்கிள்ளைமருட்டுஞ்சொல்லாள.

வேய்தானெவ்வாமையான், வெறுத்துமாறினதோள.

இ - ள். செல்வன் எரிகின்ற காமததாலே விள்ளாறுயத தோளானை யமிர்தென்றுகருதி அவளுடலாற் கலங்காதபடி நலத்தைத்தேற்றி ஆற்றுவிததலாலே அவள் நீங்காமற் பருகினளென்க. (௧௬௬)

திரையிடைக்கொண்டவின்னீரமுதுயிர்பெற்றதென்னு
முரையுடைக்கோதைமாதரொளிநலநுகர்ந்துநாளும்
வரையுடைமார்பனங்குவைகினனென்பமாதோ
கரைகடலனையதானைக்காவலன்காதலானே.

உயிர் - சீவகன்.

இ - ள். வரைதோறகின்றமாரபன், அமிர்துதனக்கோருயிரைடபெற்றதென்று உலகங்கூறுமுரையை யிப்பொழுதுடைய மாதரது நலத்தை நாளுநுகாந்து அரசனது காதலாலே அவ்விடத்தே சிலநாள் தங்கினனென்க (௧௬௭)

வாளினான்மிடைந்தகண்ணாள்வருமுலைத்தடத்துள்வைகித
தோளினான்மிடைந்துபுல்லித்தொண்டைவாயமுதமாந்திக்
காளைசெல்கின்றநாளுட்கட்டியங்காரன்மூதூர்
மீளிவேற்குரிசிற்குற்றார்க்குற்றதுவிளம்பலுற்றேன்.

மிடைந்து - மிடைய.

இ - ள். காளை முற்கூறியவாறே வாளாலேபோர்செய்யப்பட்ட கண்ணாளது முலைத்தடத்தேவைகிப் புல்லி மாந்தி நடக்கின்றநாளிலே, இராசமாபுரத்திலிருக்கின்ற அக்காளைக்குற்றார்க்கு உற்றகாரியத்தைக் கூறலுற்றேனென்றாரென்க. ()

வெண்மதியிழந்தமீன்போல்விடலைக்குததம்பிமாழாந்
தொண்மதிச்சூழ்ச்சிமிக்கானுள்ளுழியுணாதறேற்றான்
புண்மதித்துடைநதபோதுபொழிந்துமட்டொழுகுநன்னாட்
டுண்மதிவருந்தநாடியொளிநகரெய்தினானே.

இ - ள். சீவகற்கிளையான் மதியையிழநத உரோகிணிபோலேமயங்கி மதியாற சூழ்ச்சிமிக்கானிருப்பிடமறியானாய் நாட்டினகணனே யறிவுவருந்தத்தேடிப் பின்பு குணமாலையகத்தைச் சேர்ந்தானென்க. (௧௬௯)

வெள்ளிவெண்மலைக்குவேந்தனொருமகளவேற்கட்பாவை
யொள்ளிழையவளைகேட்பானுறுவலிசெல்லுமாங்கண்
வள்ளிதழ்க்கோதைதானேயிட்டதோர்வண்ணந்தன்னைக
கொள்ளாததான்முரலலுற்றுக்கோலமைவீணைகொண்டாள.

இ - ள் ஆணடுககாணாதே, கலுழவேகன்மகள் பாவை ஒளளிழை யவளைக் கேட்டற்கு அவன்செல்கின்ற வளவிலே, அககோதை தானே புணாத்ததோா புணர்ப்புவிசேடத்தைத் தானேமனங்கொள்ளப பாடலுறறு வீணையைக கைக கொண்டாளென்க. (௧௭௦)

ஆடகச்செம்பொனணியாளையவார்ந்தனையதின்கோன்
மாடகநொண்டுகொண்டுமாததிரைநிறையவீககிச்
சூடகமணிந்தமுனைகைததொகுவிரல்சிவபபவெறறித
தோடலர்கோதைகீதந்துணிவினிற்பாடுகின்றாள்

மாடகம் - பாவிகைவடிவான வீக்குங்கருவி.

இ - ள். கோதை பொன்னணியிறகட்டின நெய்யொழுகினறபோன்ற நரம்பினை மாடகத்தாலேமுகந்துகொண்டு நிறையவீக்கிக் குவிந்தவிரல் சிவக்கும்படி தெறித்துப்பார்த்துக கீதத்தைத் தெளிவோடே பாடாநின்றாளென்க (௧௭௧)

வேறு.

க. இறுமருங்குல்போதணியினைனறினைந்துகையி
னறுமலாகள்சிந்துவார்நண்ணாதுறந்தார்
நண்ணார்துறபபநனிவளையுந்தொடுறப்பக்
கண்ணேவாமுத்துமைப்பததோழிகழிவேனோ.

இக்கவிமுதல் நான்குமொருதொடா.

தோழி! அவர்துறப்ப, வளையுந துறப்ப, கண மாறாதேயழ, இங்ஙனங் கழிவேனோ? கழியாததொரு நாளும் வருமோவென்றாளென்க. ஓகாரம வினா. ஒழிந்தவறறிற்குமிவ்வாறுகூறுக (௧௭௨)

உ. பூமாலைசூடிற்பொறையாற்றாதுண்மருங்கு
லேமாராதென்றினைவாரெண்ணார்துறந்தா
ரெண்ணார்துறபபவினவளையுந்தோடுறப்ப
மண்ணாவேற்கண்டுயிலாதோழிமருளவேனோ.

முலைப்பாரத்தைச் சுமத்தலாற்றாதமருங்குன் மாலைசூடின் முறியும். மண்ணுதல - மஞ்சனமாடுதல்; கடைதலுமாம். துயிலாவாவென்க. (கசக)

கூ. வண்டேதவமமருங்குனேமென்றுபூமாலை
கொண்டோச்சுயகாதலாகூடாாதுறந்தார்
கூடாதவாதுறப்பக்கோல்வளையுநதோடுறப்பத்
தோடாாபூங்கன்டுயிலாதோழிதுயாவேனே.

வண்டே - வண்டு இயல்பான மணததையூத ஒபபளைகருப பூவுமாலையும வந்த வளவிலே, பூவை யவளகையினின்றுஞ்சிந்தி மாலையை யவள்சூடாதபடி தன்கைக கொணடு, இஃதெடுத்திலேனுயின் மருங்குன்முறியுமென்றுகூறி, படிநதவண்டை அதனுனேட்டினுனென்றுணாக பா முற்கூறியவேயாம். (கசச)

வே று.

ச. ஊன்றகாத்தனையபோன்றுமூடெரிமுளை பபபோன்றுந்
தோன்றுபூவிலவத்தயகட்டொகையணிலனையபைங்காய
கான்றமென்பஞ்சியார்ந்தமெல்லணையாழ்கைநீக்கித
தேன்றயங்கிணர்பெய்கோதைசிந்தையினீட்டினுளே.

தகாககப்பட்ட பூவையொதத வூன்போன்றும, எரி பலவாய்முளைப்பனபோன்றுந் தோன்றும் பூவையுடைய இலவத்திடதது அணிலனைய காய்கான்றபஞ்சென்க

இ - ள். அஙஙனம்பாடுகின்றவள் கழிவேனே? மருள்வேனே? துயர்வேனே! என்று பாடி யாழைவைத்து அணையிலே சாய்ந்து வருத்தத்திலே நீட்டித்தாளென்க. (கசரு)

வே று.

நுணணியவரியொடுதிரண்டுநோக்குநா
கண்மனங்கவழ்றியகாமாதொண்டைவா
யண்ணலைநினைநதுவெய்துயிரப்பவாய்நலம்
வண்ணத்தின்மழுங்கிவாட்கண்ணிவாடினுள்.

நுண்ணியவரியோடேதிரண்டு விருப்பமருவினவாய்.

இ - ள் வாட்கண்ணி நோக்குநா கண்மனங்கவற்றியவண்ணலை அங்ஙனநினைந்து வெய்துயிர்த்தலாலே வாயினதாய்நலம் பழையவண்ணத்தினின்றுநீங்கப்பட்டு மேனியும் வாடினுளென்க (கசசு)

மின்றவழ்மணிவரைமாலைமார்பனைப்
பொன்றவழிளமுலைபொருதுபுல்லுநா
ளென்றுகொலெனநினைந்திருந்தசெவ்வியுட்
சென்றனன்சீவகற்கிளையசெல்வனே.

பொருது - பொர.

இ - ள். அங்ஙனம்வாடினவள் வரைபோலுமார்பனை இப்பசலைபாந்த முலைகள்

ருக

புல்லுநாள் என்றுதானென்று சென்றநாளொழிந்தநாளைத் தன்ஞானத்தால் நினைந்திருந்தகாலத்திலே நந்தட்டன் சென்றானென்க (௧௪௭)

வேறு.

ஐவிலினகலநின்றாங்கடிதொழுதிறைஞ்சினாற்கு
மைவிலைபெற்றகண்ணாண்மைந்தனை மருண்டுநோக்கிக்
கைவிலுங்கணையுமில்லாககாமன்போந்திருக்கவென்ன
மொயவெல்லுங்குருதிவேலான்மூவிற்கணிறைஞ்சிநின்றான்.

இ - ள். ஐந்துவிற்கிடைநீளத்தேநின்று அவ்விடத்தேவணங்கிக் கவிழ்ந்துநின்றவனுக்கு மை விலைபெறுதற்குக் காரணமானகணணாள் அவனை மருணடுபாரத்து வேலான்! இங்ஙனேபோந்திருக்கவென்றுகூற, அககாமனும் பின்னை மூன்றுவிறகிடைநீளததேவந்து வணஙகி நின்றானென்க.

மொய்-பகை. யிறைஞ்சினாற்குக்கூறவென்க. அவன்கேட்டதறகுமருண்டாள். வேலான்போந்திருக்கவென்று அவள்கூறக காமனிறைஞ்சிநின்றானென்று தேவா கூற்றாக்குக. இனிப் பிள்ளையை யுவந்துகூறுமாறே கூறினாளென்று அவள்கூறலுமாம். (௧௪௮)

திங்களவாண்முகமுநோக்கான்றிருமுலைத்தடமுநோக்கா
னங்கதிாக்கலாபமின்னுமணியல்குற்பரப்புநோக்கான
செங்கயற்கண்ணினாடன்சீறடிச்சிலம்புநோக்கி
யெங்குளாரடிகளென்னாவின்னணமியம்பினானே.

இ - ள் கயற்கண்ணினாளுடைய முன்பு திஙகளையொக்குமுகத்தில் இப்பொழுதுநிகழ்கின்ற வாட்டதனதயுநோக்கானாய், முன்புநன்றாகியமுலை இப்பொழுது பசந்தபசப்பையுநோக்கானாய், முன்பு கலாபமின்னுமல்குலிலாடை மாசுணடதன்மையையுநோககானாய்த் தானிறைஞ்சிநிறறலின் அடியிறசிலம்பொன்றையுமேநோக்கி, எங்குளாரடிகளென்று இப்படியொருவார்த்தைகூறினானென்க

உம்மைகள் வருத்தத்தின்சிறப்புணர்த்தின. அவள்வாடியிருந்த வருத்தமிகுதியைத் தானுணராதே அவட்குப்பொருந்தாததோா மொழி மேற்கூறுகின்றானென்பார், இன்னணமியம்பினானென்றார் (௧௪௯)

பொறிகுலாய்க்கிடநதமார்பிற்புண்ணியன்பொன்றினானேல்
வெறிகுலாய்க்கிடந்தமாலைவெள்வளைமுத்தநீக்கி
நெறியினானோற்றலொன்றோநீளெரிபுகுதலொன்றோ
வறியலென்கொழுநன்மாய்ந்தாலணிசுமந்திருப்பதென்றான்.

பொறி - மூன்றுவரை.

இ - ள். புண்ணியன்பொன்றிவிட்டானாயின், நீ நோறறலொருகாரியம்; அஃதன்றிஎரியிலேபுகுதலொருகாரியம், இவ்விரண்டுமன்றிக் கணவனிறந்தால் அணிசுமந்திருப்பது யான்கேட்டறியேனென்றானென்க. (௧௫௰)

காய்தழல்கவரப்பட்டகற்பகமரத்திற்கன்றி
யாய்கழற்குரிசில்வாடியற்புத்தியழலுணிற்ப

வாய்மொழித்துணைகளுற்றுள்வனைசூழறகற்றையவண்டார்த
தோய்பிழிதுளிக்குவகண்ணிச்சுரும்புசூழ்கொம்பனாளே.

இ-ள் அஙஙனங்கூறிக் குரிசில் தீமேயந்தகறபகம்போலே யன்பாகிய தீயின் வெமமையிலே வாடிக னின்றினின்றாகை, அதனைககண்டு பண்ணியகுழற்பறறத்தை யும, வளவியதாரினையும், செறிந்த மதுவைத்துளிககுங கண்ணியினையுமுடையதோா கொம்பனாள, முறபட அவன் மறைந்து வேற்றுருககொணடிருககின்றபடியைக் கூறி விட்டுப பின் செய்திகூறுதலுறறாளென்க. (கடுக)

மதுமுகத்தலாநதகோதைமாற்றமைந்தற்குரைப்பாள
கொதிமுககுருதிவைவேற்குரிசிலோநம்மையுள்ளான்
விதிமுகமணங்களெய்திவீற்றிருநதின்பமுய்பப
மதிமுகமறியுநாமேவாடுவதென்னையென்றாள்.

இ-ள். கோதை நந்தட்டனுக்கு வாாத்தைகூறுகின்றவள், குரிசிலோ நமமை நினையானுய ஊழின்முகத்தாலே யுளவாய மணஙகளைச்செயது இன்பததைநுகழதத, மதிமுகமென்னும் விஞ்சையையறிந்திருககின்ற நாமே யிதறகுபபுலபபதன்றி அவற்கு ஏதமுண்டாமென்று வாடுவது என்னெனறாளென்க.

நாமெனத தன்னையுயாத்துககூறினாள். இதனால் அவனசெய்திகூறினாள (கடு௨)

வேண்டியநெமக்குநேரின்வில்வலாய்நுமையனைாக
காண்டியெனறுரைப்பக்காளையெழுமையுமடிமைநேர
மாண்டதோாவிஞ்சையோதிமதிமுகந்தைவந்திட்டா
ணீண்டதுபெரிதுமன்றினித்துழிவிளக்கிறறன்றே.

இ-ள. வில்வல்லாய்! யாமவேணடிய அடிமைத்தொழிலை நீயெமககுநே ரின நும்முடையதமையனைாக காண்பையென்று தததை யசதியாடிக்கூற, அவனும் இம்மையேயன்றி யெழுமையும் அடிமையாகக்கடவேனென்று நோந்தானாக, அவள் ஒருவிஞ்சையையோதித தன்முகததைத் தடவினாள்; அவ்விஞ்சை அவனிருந்தவிடத் தை இவனுக்கு விளககிறறென்க

நீணடதென்றது - இவனுககு மிகவும் அரியகாட்சியை. அரிதன்றாகவிளக்கிற றென்றவாறு. பெருமை - அருமை. இனித தூரியவூர் தூரிதன்றாகவென்றலுமாம். ()

பொற்புடையமளியங்கட்பூவணைப்பள்ளிமேலாற
கற்பகமாலைவேயந்துகருஙகுழற்கைசெய்வானை
முறபடககண்டுநோக்கிமுறுவல்கொண்முகத்தனாகி
விறபடைநிமிர்ந்ததோளான்றொழுதுமெய்குளிர்ந்துநின்றான்.

அழகிய கள்ளையுடைய பூவணைப்பள்ளியாகிய பொற்புடையமளியென விசே டித்துநின்ற இருபெயரொட்டு. கற்பகம்: அரசா தமதாணையால் இவ்வுலகிற் கொணர்ந்தகற்பகங் தேவரதுசாபத்தாற றன்னிலையன்றிப பூவளவே யுண்டாயிற் றென்க. மந்தாரமும் அவ்வாறும்; கவிரமும அவ்வாறும். இனி யுத்தரகுருவிலுள்ள கறபகம் ஈண்டுக்கொணாந்தாரென்றுமாம். கனகமாலைக்குக கறபகமாலையென்றொரு பெயருமாம்.

இ - ள். அமளிமேலேயிருந்து வேய்ந்து கைசெய்வானை நந்தட்டன் எதிர முகமாகக்கண்டு மகிழ்ந்தமுகத்தனாய்த் தொழுது குளிர்ந்துநின்றானென்க.

நோக்கியென்றது - தத்தை அவன் வேற்றுருக்கொண்டிருப்பானென்றுகூ வதனை மனத்தானோக்கியென்றவாறு (கருச)

வேறு.

செய்தவிஞ்சையைத்தேமொழிமாறறலு
மையனெஞ்சொடுவணடிமிர்தாரினை
பொய்யதன்மையிறபூங்கழலானடிக்
கெய்துகேனருளாயென்றிறைஞ்சினன்.

அடிகரு - உருபுமயக்கம்

இ - ள். தேமொழி தான்செயதவிஞ்சையை மாறறினவளவிலே, தாரினன், "வீற்றிருந்தின்பமுயப்ப" என்றது பொயயன்மையாலே, யான் சீவகனடியைசசா வேன்; அதற்கருளென்று மையல்நெஞ்சினோடு இறைஞ்சினனென்க. (கருரு)

மதுக்கைமாலையும்வண்டிமிர்சாந்தமும்
புதுக்கச்சாந்தபொன்வாளுஞ்சுரிகையுங்
கதுப்பினனமுங்காமர்கலங்களும்
பதிக்கட்டம்மெனப்பாவையுமேவினள

கையையுடையமதுமாலை மயிருககினியபுழுகு.

இ -,ள். பாவையும் மாலைமுதலியவற்றை யானிருககின்றவிடததே தாருங களென்று ஏவல்செய்வாாக்குக்கூறி அவர்கொணடுவந்தவுற்றை நீயணியென்று இவனை யேவினளென்க. (கருசு)

மணியின்மேற்புறம்போர்த்தன்னமாககதிர
துணியவீசுந்துளஙகொளிமேனியன
பணியிற்பல்கலந்தாங்குபுசென்றபின்
னணிசெய்கோதையங்காமினியோதினள.

இ- ள். பளிககுமணியின்மேலே இளையகதிைப்போாத்தன்னவாகத் தத்தை யதுபணியாலே தன் பழையவடிவிற்குப்புறத்தே யிருடேணியவீசும் ஒளிமேனியை யுடையனாய்க் கலங்களையும் ஒழிந்தவற்றையுந் தாங்கிச் சென்றபின்பு, அவள் அழகிய வாகாசகாமினியை யோதினளென்க

கலமெனவே படைக்கலங்களுமடங்கின. பணியென்றது - இப்பொழுது சீவகன் கொண்டுநிற்கிற நிறமும் வடிவும் அவனைக்காணுமளவும் இவனுக்குநிற்கவென்று நிரு மித்ததனை. இங்ஙனநிருமித்தது, நந்தட்டனவடிவுடனே கொண்டுபோய் அரசன் கோயிலில் * ஆடவர்குறுகாவருங்கடிவரைபபினுள்ளே வைத்தாற் சீவகனறிவதற்கு

* நெடுநெல்வாடை:—பீடுகெழு சிறப்பிற பெருந்தகை யல்ல - தாடவா குறுகா வருஙகடி வரைப்பின். பெருந்தகை=பாண்டியன்.

முன்னே தீங்குபிறக்குமென்றுகருதியும், புறம்பேவிட்டாற சீவகனென்னும்பெயா வழங்காமல் அப்பொருடருவதோாபெயா ஆண்டு வழங்குகின்றமையின் இவற்கு அறிந்துகோயிலுட்சேறலரிதென்றுகருதியுமென்றுணாக அஃது "அந்நாட்டவ்வூரப் பெயரல்லாப்பெயர்சொன்னான்" என்பதனானுணாக இதனானே சுதஞ்சணனைநீங்கின பின்பு தன்னைமறைத்தற்கு வடிவுமபெயரும வேறாகவேண்கழத்துகின்றா னென்ப தூஉம்பெற்றாம். வடிவுமறையாக்கால இவைமறைததற்றுபயனின்றாம். இவ்விலம பகங்களிற்சீவகனென்றபெயா தேவாகூறறு பொருளுாைககுமிடததும் அப்பெயரே கூறிப் பொருளுாைக்கவேணடுதலின் வநதது. அந்நிலத்தாா அப்பெயரறியாரென் றுணாக இனி இவவாறன்றி யரசாகுலததிலும வணிகாகுலத்திலும் பிறநதவாகட்குச் சிறிதுவடிவொப்பன்றி ஒருவடிவேயென்றுமேற்கூறுதல பொருந்தாது. அது தே வாக்குக்கருததாயின, ஈண்டன்றிப பிறாண்டுமிருவாககுமொருவடிவென்றேகூறுவா, அதுகூறாமையானும் இதுவே தேவர்க்குககருததென்றுணாக. (சருஎ)

சாநதினால்மெழுகிததட மாமல
ராயநததாமஙகளுாறறியகிற்புகை
யேந்தியிடடிலையாரொடுநீங்கினா
காந்திவண்டுணாஙகறபகக்கோதையே.

இ - ள் கோதை, அதனையோதி யிவன்கிடககினறவிடததைமெழுகி நாறறிப புகைத்து ஆயத்தோடே போநதாளென்க.

காந்தி - பசித்து. (சருஅ)

தூமமாாநததுகிலணை பபள்ளிமேற
காமனறம்பியிற்காளை கிடந்தபி
னேமமாபுரததிட்டதோாமாதெய்வ
நாமநல்லொளிநந்தனையென்பவே

இ - ள் நந்தட்டன் சாமனைப்போலே யபபள்ளிமேலேகிடநதபின்பு ஒருதெய் வமஅவனைக்கொண்டுபோய ஏமமாபுரத்தே அரசன்கோயிலுக்குள்ளே யிட்டுவைத்த தென்க.

நாமம் - அச்சம், உரிசசொல் ஈறுதிரிந்தது. அசசஙகூாதலாலும் நிருமித்தவடி வாயிற்று. (சருகூ)

மின்னும்பூணும்மிளிர்கதிராரமும்
பொன்னும்பூத்ததொாகற்பகப்பொன்மா
மன்னகாளையமாதுயிமேறினான்
மன்னும்வெஞசுடாமாக்கலிவர்நததே

இ - ள. விளங்கும பூண்முதலியவற்றைப பூத்ததோர் கறபகமரத்தையொத்த காளை துயிலுணர்ந்தான், அவ்வளவிலே, ஞாயிறும் உதயகிரியிலே வந்து பரந்த தென்க (சகூ0)

வேறு.

செயயவாயநெடியகண்ணாளசெல்கெனவிடுக்கப்பட்ட
வெய்யவாட்டடக்கைவீரனிருநதலும்விசயனென்பான்

கையவாஞ்சிலையினுனைக்கண்டுவெந்தருகுசேர்ந்தான்
பையவாய்ப்பரந்தவல்குற்பாவையாக்கமிர்தமன்னுன்.

கையில் அவாவுதற்குக் காரணமானசிலையினுனெனவே காமனும.

இ - ள் தத்தையாலே போவென்றுவிடபபட்ட நந்தட்டனிருந்தவளவிலே, அமிர்தமன்னுகிய விசயனென்பான், அவனைக்கணடு மகிழ்ந்து அருகேசோந்தானென்க. (கசுக)

தெய்வமேகமழுமேனிதநிருவொளிகலந்தமாபி
னையநீயாரையென்றுற்கவனுரைகொடாதுவிட்டான்
பையவேபெயர்ந்துபோகிப்பனிமலர்க்கோதைமாபின்
மையலங்களிறுபோலுமைத்துனற்கிதனைச்சொன்னுன.

சீவகன்கொண்ட வடிவுகொண்டு நின்றதொருதெயவமாதலின், தெயவமேகமழு மேனியாய் அவற்குத்தோன்றிற்று. வடிவொன்றேயாகவுந் தெய்வத்தன்மையைத தன்னுணாவுமிகுதியா னுணாதலின், இவற்குச் சிறிதுவேறுபாடுமுண்டெனறறிந்து நீயாரையென்றுன்

இ - ள். மேனியையும் மார்பினையுமுடையவைய' நீயாரென்று வினவினுற்கு அவன் மறுமொழி கொடாதேவிட்டான்; அதனுலே யவன் மீண்டுபோய்க கோதை மார்பினையுடைய மைத்துனனுக்கு இச்செய்தியைக்கூறினுனென்க.

வசுந்தரியவற்குக்கூற, அவன்கணட செய்தியை யிதனையென்முா. ஐ - அசை இவ்விடத்திருந்து உரைகொடாதிருந்ததுவும், அவன்வெருதபடிகாத்ததுவும இவன் மேற்றங்கிய தெய்வமென்றுணர்க (கசுஉ)

க. சந்தனக்களியும்பூவுந்தமனியகுடதுணீருங்
கெந்தநாறகிலுமுத்துங்கிளரொளிவிளக்குமேந்தி
யநதில்விற்பயிற்றுநதானமவழிபடவாங்குச்சென்றுன்
மந்திரமடந்தையன்னுள்வசுந்தரிவந்துசொன்னுள. (கசுங)

உ ஆரகிற்சேக்கைநீங்கிவெறுநிலததடிகடாமே
நீரிநிற்கிடந்ததென்கொலென்றியானினைந்துபோகிச
சேர்துணைகழறசென்றேன்செல்வியோடாங்குககண்டேன்
போர்பலகடந்தவேலோய்மாயங்கொல்போற்றியென்றுள். (கசுச)

ங. கணைகடிகண்ணிசொல்லக்காணியயானுஞ்சென்றேன்
மணியிலங்கொண்பொன்வைவாள்கேடகமருங்குல்வைத்த
விணைகடிசீயமன்னனிளமையும்வனப்புமேருந்
துணையமைவடிவுஞ்சொல்லினிற்பொறியொற்றிக்கொணடான்.

ச. நீண்டதோணெடியசெங்கணீலமாய்ச்சுரிந்தகுஞ்சி
பூண்டதோராரமேனிப்பொன்னுனாத்திட்டதொக்கும்

காண்டகுகாதிற்றாழ்ந்தகுண்டலங்குவளைப்பைந்தா
ராண்டகையழகன்யாரகொலறியலனவனையென்றான்.

இவைநான்குமொருதொடர்.

அந்தில் - அசை.

இ - ள். மந்திரமாகிய மடந்தையை யொப்பாளாகிய வசுந்தரி விற்பயிற்றுந் தானத்தை வழிபடுதற்குச சந்தனக்குழம்புமுதலியவற்றை யேந்தி யவ்விடத்தேசென்றவள் வந்து எனக்கு ஒருவார்த்தைகூறினாள், அவள்கூறினபடி அடிகடாஞ் சேககையைநீங்கி வெறுநிலத்தே நீர்மையோடேகிடந்த காரணமென்னென்று நினைத்துப போய்க் கனகமாலையைக் கோபித்தற்குச்சென்றேன், சென்றநான் அவளுடனே யவ்விடத்தேகண்டேன்; ஆதலின், வேலோய்! அவர்செய்தி மாயம்போலேயிருந்தது; அந்நிலைமையைப் பாதுகாத்துக்கொள்ளென்று கூறினாள், அவள் அங்ஙனங்கூறுதலின், யானும அச்செய்தியைக் காண்டற்குச்சென்றேன்; சென்றுயான்கண்ட ஒப்பில்லாத சீயமன்னான்றன்னுடைய இளமையையும், வகுப்பழகையும், தோற்றப்பொலிவையும், ஒப்பில்லாதவடிவையுங் கூறில், நின்னுத்தமஇலக்கணத்தை யொற்றிக்கொண்டிருந்தான்; அங்ஙனமிருந்த தோளையுங் கணையையுங் குஞ்சியையுங் கல்லிலேபொன்னுரைத்ததொக்கும் ஆரமேனியையுங் குண்டலத்தையுமுடைய வழகன் யார்? அவனை யானறிகின்றிலேனென்றானென்க

வசுந்தரி யடிகள்வெறுநிலத்தே கிடந்தாரென்று கழறச்சென்றேனென்றமை யானும், விசயன் நிற்பொறியொற்றிக்கொண்டானென்றமையானும், உவமைகூறுதலின்றி இருவரும் இருவாக்குமொருவடிவென்றே கூறினர். உவமையாவது சிறிதொத்து இரண்டிற்கும்வேறுபாடுணர்த்துவது; இஃதுஅதுவன்மையுணர்க. பொறியும் ஒன்றிலழுத்தினால்ஒப்பன்றி யதுவேயாயிருக்குமென்றுணர்க. இவ்வாற்றானும் நிருமித்தமையேகூறிற்றும். வசுநதரிமகடூஉவாதலிற் றெய்வத்தன்மையுணாநதிலள். ()

இனத்திடையேறுபோலுமெறுழ்வலியுரைத்தமாற்ற
மனத்திடைமகிழ்ந்துகேட்டுமைந்தனந்தட்டனேயாம
புனத்திடைமயிலனாளாற்பொருளுரைபெற்றுவந்தா
னெனத்தவிராதுசென்றாங்கெய்தினனென்பவன்றே

யாமென்றேபாடம. மைந்தன்யாமென்பவெனக்கூட்டுக. பொருளுரை - மந்திரம

இ - ள். விசயன்கூறியகூற்றை யிவன்கேட்டு உட்கொண்டு தாங்கண்டமைந்தனை நாமென்பர்கள், அதற்குக்காரணம் தத்தைபொருளுரையாலே யான்கொண்ட விவ்வடிவைப்பெற்று நந்தட்டனேவந்தானென்று கருதி மனத்திடைமகிழ்ந்து தங்காதே யப்பொழுதே யவ்விடத்தேசென் றணுகினனென்க.

என்ப எனப பன்மையாறகூறிற்று, வசுந்தரிகூற்றையுங்கருதி. அன்றே-அப்பொழுதே. (௧௬௭)

கருமுகிற்பொடித்தவெய்யோனகடலிடைநடப்பதேபோற்
றிருமுகஞ்சுடரநோக்கிச்சீவகன்சென்றுசேர்ந்தான்
மருமனையரிதிற்கண்டதளஞ்சயன்போலத்தம்பி
திருமலர்த்தடக்கைகூப்பிச்சேவடிதொழுதுவீழ்ந்தான்.

கடலிடைத்தோற்றின விளங்கதிர் கருமுகிலிடத்தே விடாதுநடப்பதேபோலு முகம. முகில் குழலிற்கும், வெய்யோன் முகத்திற்குமுவமை * "கடற் - ரேற்றுஞ் செஞ்சுடர்போலச்சுடர்ந்ததே" என்றாரபின்னும்

இ - ள். சீவகன் றன்முகஞ்சுடரநோக்கிச் சென்றுசோர்ந்தான்; அப்பொழுது தருமனையரிதாகக்கண்ட விசயனைப்போலே தமபி தொழுதுவீழ்ந்தானென்க. (௧௬௮)

தாமரைத்தடக்கைகூப்பித்தாண்முதற்கிடந்ததம்பி
தாமரைத்தடத்தையொத்தான்றம்முனுமபரிதியொத்தான்
றாமரைக்குணத்தினானுமமுறைமுறைதழுவிக்கொண்டு
தாமரைச்செங்கண்ணுந்தன்னுறுபரிவுதீர்ந்தான்.

இ - ள். அங்ஙனந்தொழுதுகிடந்ததம்பி தாமரைததடத்தையொத்தான், தமைய னும் அவன்முகமுதலியவறறையலாததலிற பரிதியையொததான், அவ்வழிபாட்டின் பின்பு தாமரையென்னுமெணணையுடைய குணததினானே அன்பின்மிகுதியான் முக் காறறழுவிக்கொணடு பின்பு சீவகனுந் தனக்குற்றவருத்தமெல்லாந்தீர்ந்தானென்க.

என்றது - யான்போந்தபின்பு இருமுதுகுரவருறறதென்னென்று தனக்குற்றுக கிடந்தபரிவும் இவன்வாய்க்கேட்டுத்தீர்ந்தானென்க. (௧௬௯)

என்னுறுநிலைமையோராதெரியுறுதளிரின்வாடிப
பொன்னுறுமேனிகன்றிப்போயினீர்பொறியிலாதேன்
முன்னுறவிதனையோரேன்முரிபபேரொககலெல்லாம்
பின்னுறுபரிவுசெய்தேன்பேதையேன்கவலலென்றான்.

எனக்குற்றநிலைமையை யோராதென்றது - தேவன்கொண்டுபோந்த நிலைமை யையறிந்தும், உண்மையென்றுணராதே யென்றவாறு. "கொண்டுபோமியக்கன்" என்று இருடிகூறியகூற்றைக் கந்துகன்கூறக்கேட்டும் இவாவருந்துவரென்று இங் ஙனங்கூறினான். பொறியிலாதேனென்றது ‑ இருமுதுகுரவரையும் வழிபட்டிருக்கும் நல்வினையில்லாதேனென்றவாறு.

இ - ள். பொறியிலாதேன் கட்டியங்காரனாற் சிறைசெய்வித்துப் பிரிவிப்ப தோர் தீவினைவந்துமுன்னிறறலாற் குணமாலையது ஒருயிர்க்காகப் பல்லுயிர்க்குந் தீங்குவருகின்றவிதனை யோரேனாய்ப் பேதையேனாகியயான் மதனன்மேலேவாமை யின், மேனிகன்றிப்போனநீங்களும் ஒக்கலும் எல்லாம் என்னுறுநிலைமையோராதே வாடிப பின்பு முடியவனுபவிக்குந்துன்பத்தைச் செய்தேன், இனி நீவருந்தாதே கொள்ளென்றானென்க

இதனையென்றது-களிற்றிடையுதவியதனை. முன்னும் †"ஊழ்வினையென்றுவிட் டான்" என்றா. இனி முன்னுறவென்றதனை அச்சணந்தியாசாரியர்க்கு நேருகின்ற பொழுதென்னின், அதுபொருந்தாது; என்னை? தான்மேல்வருகின்றதறியானதலா னும, ஆசிரியன்கூறறாலே ஓராண்டு அவனிருபபளென்றுணர்ந்து "இன்னுயிரவனை யுண்ணுமெல்லைநாள்வந்ததில்லை" என்று தான்கூறினமையானுமென்பது. (௧௭௦)

* இலக்கணையாரிலம்பகம், ௪௨௦. † பதுமையாரிலம்பகம், ௨.

ஆக்கமுங்கேடுமுறநீரடிகளேயல்லிர்மேலைப்
பூக்குலாமலங்கன்மாலைப்புட்கொடியாறகுமுண்டே
வீக்குவார்முலையினார்போல்வெந்துவெந்துருகிநைய
நோக்கினீரென்னையென்றானுதியழற்குட்டமொப்பான.

இ - ள். நந்தட்டன், ஆககமுங்கேடுமுறநீ நீரேயல்லீர்; முன்னுள்ள இராமனுக்குமுண்டு, அவன் இலங்கனஞ்செய்யாதே கேட்டிற்குத் தம்பியையுமுதவியாகக் கொண்டான்; நீர் உடன்பிறந்தமகளிரைப்போலே உதவாதேயிருந்து வருந்தும்படி யென்னைப் பார்த்தீரென்றானென்க

நோக்கினீரென்றது - தோபணணிவந்துகணடவனை மதனன்மேலே செல்லென்னாதே நில்லென்று நோக்கியதனை. (கஎக)

குரவரைப்பேணலின்றிக்குறிப்பிகந்தாயபாவந்
தரவந்தபயத்தினாலித்தாமரைப்பாதநீங்கிப
பருவருந்துன்பமுழந்தேன்பாவியேனென்றுசென்னி
திருவடிமிசையின்வைத்துச்சிலம்பநொந்தழுதிட்டானே

இ - ள். அவன், முறைபிறப்பிற குரவரைப்பேணலின்றி யவாகருத்தைக்கடத்தலானுண்டாய பாவந்தருதலான் வந்தபயனாலே, இப்பாதத்தைநீங்கி மிககவருத்தமுற்றேனென்று சென்னிமிசையிலே அடியைவைத்து நொந்தழுதானென்க. (கஎஉ)

பரிந்தழுகின்றதம்பிபங்கயமனையசெங்கண்
பொருந்துபுதுடைத்துவேண்டாபுலம்புதல்காளையென்று
மருந்தனாளுறையுங்கோயின்மடுத்துடன்கொண்டுபுக்கா
னருந்ததிக்கற்பினாளையடிபணிந்தவனுங்கண்டான்.

இ - ள். காளை! வருந்துதலவேண்டாவென்றுகூறித் தம்பிகண்ணைத்துடைத்து அமுதனாளிருக்குங்கோயிலிலே வலிதிற்கொண்டுபுக்கான்; அவனும் அவளைவணங்கிக் கண்டானென்க. (கஎ௩)

கொழுங்கனைக்குறிப்பினாலேகுமரன்யாரென்றுநோக்கக்
கழுமியகற்பினாய்நின்மைத்துனனையனென்ன
வெழுமையும்பெறுகவின்னவிளங்கிளைச்சுற்றமென்றா
கொழுமலர்த்தடங்கட்செவ்வாய்க்குவிமுலைக்கொம்பனாளே.

இ - ள். கொம்பனாள், தன்கணவனைக் குறிப்பினாலே யிவன்யாரென்றுகேட்ப, கற்பினாய்! ஐயன் நின்மைத்துனனென்றானாக, அவளும் இத்தன்மைத்தான இளங்கிளையாயசுற்றம் எழுபிறப்பும் பெறுவேனாகவென்றாளென்க (கஎச)

குடவரையனையமார்பிற்குங்குமமெழுதிக்கோல
வடவரைவைரச்சாதிவாலொளிகலந்தபைம்பூண்
டடவரைமார்பின்மின்னத்தம்பியோடமிர்தமுண்டான்
படவரவல்குலாளும்பான்மையால்விருந்துசெய்தாள்.

இ - ள். குங்குமமெழுதலாலே அத்தகிரியையொத்த நந்தட்டன் மார்பிலே யணிந்த சாதிவைரத்தின் ஒளிகலந்தபூண் சீவகனது வரைபோலுமார்பிலேமின்னும படி எதிரேயிருந்து கூடவுண்டான், அல்குலாளும் விருந்திடுகூற்றாலே விருந்து செய்தாளென்க. (களரு)

விருந்தவள்செய்தபின்றைத்தம்பியுந்தானும்வேறு
விருந்துழியென்னைக்காணுதுற்றதையவன்கொலென்று
பொருந்தினர்செய்தவெல்லாம்புரைவிடுத்துரைமோவென்னக்
கருங்கழற்செங்கட்டைந்தாக்காளையீ துரைக்கின்றானே.

இ - ள். அவள் விருந்துசெய்தபின்பு தம்பியுந்தானும் தனித்திருந்தவிடத்து, என்னைக் காணாமையினாற் குரவர்முதலாயினோர் உற்ற வருத்தமென்னென்று அதனை முதற்கேட்டுப் பின்பு தோழன்மார்செய்த கூறுபாடெல்லாம் வேறுபடுத்திச் சொல லாயென்று சீவகன்கூற, நந்தட்டனும் இதனைக் கூறுகின்றானென்க

உரைக்கின்றவன் இடுவித்திட்டாளென்றுரைத்தானெனச் "சொல்லிய" என் னுங்கவியோடுமுடிக்க. கருங்கழல் - கொடியகழல் புரை - கூறுபாடு. சீவகன், தான் முன்பு அவர்செயதிகண்டுபோந்தபின்பு அவர்செய்தபடிகேட்கின்றான், குணமாலை யாரிலம்பகத்தில் நந்தட்டனுடன் றோழன்மார்கூடுதற்குமுன்பு அவர்தம்மிற்கூறிய வாறு இவனறியாமையலின், தானும் அவருங்கூடினபின்பு பிறந்தசெய்தியிவன்கூறு கின்றான். இதனால் அதற்கிது வேறுபாடாயிற்று. (களசு)

புண்ணுமிழ்குருதிபோர்த்தபோர்க்களம்போன்றுதோன்றி
யண்ணலங்கதிருமத்தமடைந்துசெவ்வான்கொளாந்தித்
துண்ணெனக்களத்துநீங்கித்தொன்னகர்ப்புறத்துத்தொக்கே
யெண்ணுமின்செய்வதென்றான்பதுமுகனெரியும்வேலான்.

இ - ள். கதிரும் அத்தகிரியையடைதலாலே குருதிபோர்த்த களமபோலே தோன்றிச் செக்கர்வான்கொண்டவந்தியிலே எல்லாரும் மழையின்மிகுதியாற் றுணுக் கென்றவளவிலே, பின்பு நின்னைக்காணாமையின், அவ்விடத்துநின்றுநீங்கி நகரிடத் தேகுவிந்து யாம் மேற்செய்யுங்காரியத்தை யெண்ணுமினென்றான் வேலானாகியபது முகனென்க. (களஎ)

மின்னெனமிளிரும்பைம்பூட்புத்திசேன்வெகுண்டுவெய்ய
கன்னவிற்றோளினானைகாண்கலேமாயினின்னே
மன்னனைவாளினானேவானகங்காட்டிமூதூர்
தன்னையுஞ்சவட்டிப்போகிச்சாமியைச்சார்துமென்றான்.

இ - ள். அப்பொழுது புத்திசேனன்வெகுண்டு தோளினானைக்காணேமாயின், இப்பொழுதே கட்டியங்காரனைக்கொன்று ஊரையுமழித்துப்போய்ச் சீவகனைச் சேர்வேமென்றானென்க. (களஅ)

சிலையொடுதிரண்டதிண்டோட்டேவதத்தனென்பான்
மலையுடைபுருமிற்சீறிமாற்றலனுயிரையுண்ட

விலையுடைக்கண்ணியீர்க்கிஃதெளிதுநங்குரிசிலுண்மை
யுலைவின்றேடின்மையாராய்ந்தொறுபபதேதுணிமினென்றான்.

தேவமாதத்தன் - உலோகமாபாலன்போற் கொள்க.

இ - ள். உலக்கல்லாலேதிரணட தோளையுடைய தேவதத்தன் மலையையுடைக் கின்ற வருமுபபோலேசிறிப் பகைவனுயிரையுண்டலாகிய இத்தொழில் உமக்கெளி தாதலின், நங்குரிசிலுணமையும் இன்மையும் வருததத்தோடேநின்றாராய்ந்து பின் பகையைக்கோறலைத துணிமினென்றானென்க

அவன்சிறையாயிருககில இஃதாகாதென்றான். (௬௭௯)

பவ்வத்துப்பிறந்தவெய்யபரிதிபோற்றிறலினாற்குத
தெவ்வரைக்கிழங்கினோடுந்தின்றுநீசொன்னவாறே
யெவ்வத்தைத்தணித்துமென்றான்சீதத்தனென்னலோடு
மவ்வலமணந்ததண்டார்ப்பதுமுகனிதனைச்சொன்னான்.

பரிதி யிருளையகறறுமாறுபோலே தன்னைசசூழ்ந்த பகையைநீக்குதற்குரியனாத லின், அவற்குத்தீஙகுவாராதென்றான். திறலினாற்கு, கு - பகைப்பொருட்கண்வந்த நான்காமுருபு. மக்கள்நூற்றுவரையுஞ் சேரக்கோறறுக் கிழங்கினோடுமென்றான்.

இ - ள் ஸ்ரீதத்தன் புத்திசேனன்கூறியவாறே திறலினாற்குப பகைவரைக் கொன்று எவ்வத்தைத்தீரபபேமென்றான்; என்றவளவிலே பதுமுகன் இதனைக கூறினானென்க.

அம் - அசை. (௬௮௦)

நம்பிநந்தட்டன்கேட்கநஙகட்குக்குரவருளளார
தம்பரிவகற்றியோம்பிநீர்க்கடன்மரபுதாங்கிக
கம்பஞ்செய்பரிவுநீங்கிக்கற்பிபபார்க்குவாத்துச்சொல்லா
ரிம்பரிவ்வுலகமொபபாய்க்கென்னையானுரைப்பதென்றான்.

இ - ள். தம்மைக்கற்பித்தறகுரியார்க்குத் தாம் உவாத்துச்சொல்லாராதலான், இவ்விடத்து இவ்வுலகொழுககந்தன்னையொககு நினக்கு இனி யான் கூறுவதெ வன்? ஆயினுங் கூறுகின்றேன், நந்தட்டன்! இதனைக் கேட்பாயாக; இந்நடுககஞ்செ ய்கின்ற வருத்தத்தினின்று நீ நீஙகி நமககுக் குரவராயுள்ளார் வருத்தத்தையு நீககி அவரிருக்குமளவும் அவரைப்பேணி அவரிறந்தால் நீர்ககடனாகிய முறைமையைச் செயவாயாக வென்று கூறினானென்க.

நீர்க்கடன் - உதகக்கிரியை. எவன் என்னையெனநின்றது. ஐ-அசை. (௬௮௧)

ஓம்படைசாற்றற்பாலதுள்ளவர்க்காகுமன்றே
யாம்புடைபெுன்கணில்லையங்கையென்கண்களாகத்
தேம்படுதாரினீர்க்குஞ்செல்வற்குஞ்செய்வசெய்தேன்
காம்படுகாட்டுத்தீயிற்கனன்றுடனெழுகவென்றேன்.

இ - ள். உயிருடனேயிருப்பார்க்கன்றே இவனைப் பாதுகாத்துக் கொள்ளென்று

கூறுவது; உயிர்வாழும் பக்கம் என்னிடத்தில்லை; ஆதலின், இது கூறவேண்டா; என்கண்கள் கையாக அவற்றினீராலே நுமக்குஞ் செல்வனுக்குஞ்செய்யும் நீர்க்கடன் மரபெல்லாஞ் செய்துவிட்டேன்; இனிக் காட்டுத்தீப்போலே சேரவெழுகவென்றே னென்றானென்க.

அழுதது-இழவென்னுமெய்ப்பாடு. நுமக்கெனவே சுற்றமெல்லாமடங்கும் ()

கோட்டிளங்குழவித்திங்களிரண்டன்னவெயிற்றுக்கோளே
வேட்டதோர்சிங்கஞ்சூழ்ந்தவேங்கையினினத்தினவெய்ய
வாட்படையெழுந்துவாழ்கசீவகனென்னுமாங்கட்
பாட்டினையொருவனெங்கள்பரிவறப்பாடினானே

கோடு - வளைவு.

இ - ள். முன்பு சிங்கத்தைச்சூழ்ந்த புலித்திரள்போலே வெய்யவாகிய நமது வாட்படை அச்சிங்கத்தினைத்தீர்த்தற்கு யான் அங்ஙனங்கூறக்கேட்டு எழுந்திருந்து சீவகன் வாழ்கவென்றவளவிலே, எங்கள் வருத்தந்தீர ஒருத்தன் பாட்டினைப்பாடினானென்க.

நீயும் யாங்களுஞ் சிங்கமும் புலியும்போலிருப்போமென்றான் (கஅரு)

வருவர்நங்கேளவரின்னேவாணுதற்பசலைதீர
வுருகிநைந்துடன்றுமுன்கைவளையுகமெலியவேண்டா
வருவிழும்மதத்தயானையதிர்ந்துழிக்காரென்றெண்ணித்
தெரிவிலபேதைமுல்லைபூத்தனதெளியிதென்றான்.

இ - ள். யானை மதத்தவாய் அதிர்ந்துழி அவற்றைக்காரென்றெண்ணி ஆராயாதே முல்லை பூத்தன, இதனைப பருவமன்றென்று தெளிநீ; இன்னேமெலியவேண்டா; யானவரிடத்தேசென்றாற் குறித்தபருவத்தே நீட்டித்தாராயின் மெலியவமையும்; யான்சென்றபொழுதே நின்பசலைதீரக் கேள்வாவருவரென்றானென்க.

இது பருவமன்றென்று தலைவியையாற்றுவித்துத் தூதுசெல்கின்ற பாணன் கூற்று. * "நிலம்பெயர்ந் துறைதல் வரைநிலை யுரைத்தல் - கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை யுரிய" என்னுங் கற்பியற்சூத்திரத்தானும், † "அரக்கத்தன்ன * * * தேரே" என்னுமகப்பாட்டில், "யாங்கா குவங்கொல் பாண வென்ற - மனையோள் சொல்லெதிர் சொல்லல் செல்லேன்-செவ்வழி நல்லியா ழிசையினென் பையெனக்-கடவுள் வாழ்த்திப் பையுண மெய்ந்நிறுத்- தவர்திறஞ் செல்வேன் கண்டனென் யானே" என்பதனானுங்கொள்க. எனவே சீவகன் இப்பொழுதுவாரானென்பதூஉம், யாஞ்சென்று பின்புகொண்டுவருவோமென்பதூஉம், இதற்குக்கருத்தென்று தேறிப் போர்த்தொழில்தவிர்தல் பயனும். இனி என்றாளென்று பாடமோதித் தோழி யாற்றுவித்தாளென்றல் ஈண்டைக்குப் பொருந்தாது. இன்னேவருவரெனக்கூட்டி இப்பொழுதே வருவரென்றால் இவனும் இப்பொழுதே வருவனென்பதுகருத்தாமாதலிற் பொருந்தாது. (கஅச)

* தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், உஅ.
† அகநானூறு, கச.

பாட்டினைக்கேட்டலோடும்பழம்பகைநட்புமாமே
யோடடியுங்கோறுமனறேநம்பிரானுண்மைபெறறூ
ஞட்டிடம்பரந்துபோகிநாடுதுநாங்களென்று
வீட்டமும்வேறுமாகவிலைப்புணைகிளைத்திட்டேமே.

ஆமே, ஏகாரம - எதிரமறை.

இ - ள். பாட்டினைக் கேட்டவளவிலே, அதன் பொருளைககருதிச் சீவகன் பிழைத்தபடியையறிந்தாற் பின்பு சிலநாள்கழித்தும் அவனைக கொல்வேமன்றே! அஃதென்னெனில், *"பழமபகை நட்பாத லில்" என்னும் பழையமொழியுமுளதன்றே, இனி யாம் பரந்துபோய நாட்டிடமெல்லாம் நாடுதுமென்றுகருதித் தனித்துந் திரண்டும் எவ்விடமுந்தேடினேமென்க

இலைப்புணைகிளைதத்ல் - ஒருபழமொழி. நாடு-நாளிலததிற்குமபொதுப்பெயா. ()

க. மணிபொதிதுகிலிறஞேன்றுமஞ்சுசூழ்வரைகளுடி
யணிநகர்யான்சென்றெய்திமாலைதன்மனையைச்சேர்ந்தேன்
றுணைமலர்க்காந்தளூழ்த்துச்சொரிவபோற்ரூன்றிமுன்கை
யணிவளைநலததோடேகவங்ஙனமிருந்தனைவாள. (கஅசு)

உ. என்னைக்கண்டடிசிலாககவையர்கவெனறவலநீங்கப்
பொன்னைகண்டையைசாயலவாபுரிந்தடிசிலேந்தத
துன்னஞேயுற்றமஞ்ஞைத்தோற்றம்போலிருநதநங்கை
பின்னைநாட்குவளைநீாவீழ்பெறறியகண்ணளாகி. (கஅள)

ந. அடிகளையின்றிநீரேயுண்ணவும்வல்லீரானீா
கொடியிர்நீரையனீரேயெனக்கசிந்துருகிகாய்பொற
கொடிதுகளார்ந்தவண்ணங்குழைந்துமாநிலத்தின்வீழ்நத
பெடைமயிறசாயலாடல்பேதுகண்டாங்குமீண்டேன.

இவைமூன்றுமொருதொடா.

இ - ள். யான்சென்று வரைகளைநாடி நகரையெய்தி குணமாலை மனையைச சேர்ந்தேன்; அபபொழுது காந்தட்பூப் பழுகி யுதிர்வனபோலேதோன்றி வளை நலத்தோடே யேகவிருந்து அஙஙனநைகின்றவள் என்னைக்கண்டு எனதவலநீங்கும்படி ஐயர்க்கு அடிசிலாக்குகவென, அவருமாக்கி அடிசிலையேந்தினராக, நோயுறறமயில் போலிருந்த நஙகையணுகிச செவவியழிந்தகுவளை நீாவீழுந்தன்மையையுடைய கண்ணளாய், ஐயரே! அடிகளையின்றி நீரேயுணணவும் வல்லீராயினீா, நீாகொடியீரென்று கசிந்துருகிப் பொற்கொடி துகளார்ந்தாற்போலே நிலததேவிழுந்த சாயலாடன் வருத்தஙகண்டு அவ்விடத்தினின்றும மீண்டேனென்க.

ஆக்குக - விகாரம். என்று - என்ன. பொன் - திரு. பின்னை, ஐ - அசை. பின்னுள்-மற்றைநாள். பெடைமயிலென்ருர், பொலிவழிதலின். (கஅஅ)

செல்வனையின்றுநாடிச்சேவடிதொழுதலொன்றே
வல்லதிவ்வுடம்புநீங்கிவேற்றுலகடைதலொன்றே

* பழமொழி, கூள.

யெல்லையிவ்விரண்டினுென்றேயிப்பகன்முடிப்பலென்று
மல்லிகைக்கோதையம்பான்மலேமகண்மனையைச்சேர்ந்தேன்.

இ - ள். அங்ஙனமீண்டு செல்வனைக்கண்டு வணங்குதல் ஒருகாரியம்; அது கூடாதாயின், இறத்தலொருகாரியம; இவ்விரண்டினுென்றை யின்றைப்பகற்பொழுதினெல்லையின் முடிப்பேனென்றுகருதித் த்தைமனையைச் சேர்ந்தேனென்க. ()

மணியொலிவீணைபண்ணிமாண்டகோறடவமாத
ரணிமுலைத்தடத்திறுெற்றிவெப்பராற்றடபமாறறிப்
பிணைமலர்க்கோதைகீதம்பாடயான்பெரிதும்பேதுற்
றிணைமலர்க்கண்ணிக்கொவ்வாவிளிவருகிளவிசொன்னேன்.

இ - ள். கோதையையுடையவம்மாதா அழகிய ஓசையையுடைய யாழைபபண்ணி அதனரமபைத்தடவுதற்கு முலைத்தடத்தேசேர்த்தி அதன் வெப்பத்தாலே அதன்குளிர்ச்சியைமாற்றிப் பாட, யான் பித்தேறி அவளுக்குப்பொருநதாத கிளவியைக்கூறினேனென்க.

இளிவருகிளவி - "பொறிகுலாய்" என்னுங்கவி (ககO)

சொல்லியவென்னைநோக்கித்துளங்கனும்மடிகள்பாதம்
புல்லயான்புணர்ப்பலென்றுபொழுதுபோய்ப்பட்டபின்றை
யெல்லிருள்விஞ்சையோதியிவ்வழியிடுவித்திட்டாள்
சொல்லுமினடிகணீரும்போந்தவாறெனக்குமென்றுன்.

இ - ள். அஙஙனஙகூறிய வென்னைநோக்கி வருந்தாதேகொள்; நுமமடிகள் பாதத்தை நீசேரும்படி யான்கூட்டுவேனென்றுகூறி ஞாயிறுபட்டபின்ப விஞ்சையையோதி விடியற்காலத்திருளிலே இவ்விடத்தே இடுவித்தாளென்று உரைத்தான், அங்ஙனமுரைத்தபின்பு, அடிகளே! நீரும் போந்தவாறு எனக்குக் கூறுமினென்றுனென்க.

காளையீதுரைக்கின்றவன் இடுவித்திட்டாளென்றுரைத்தானெனக்கூட்டுக.(ககக)

தாதையாருவப்பச்செய்வான்றாழ்கச்சிற்பிணிப்புண்டைய
போதராநின்றபோழ்திற்போர்ப்புலிக்குழாத்திற்சீறிக்
காதனஞ்சுற்றமெல்லாங்கையிலங்கெஃகமேந்திச்
சாதலேபுரிந்துதோன்றுந்தன்மையங்கரிற்கண்டேன்.

இ - ள். ஐயனே! தாதையாா மனமகிழ அவரேவல்செய்தறகாக விடாமறறுகுவதோர் கச்சிட்டுப்பிணித்தாற்போல அவர்சொல்லாற்பிணிப்புண்டு போதுகின்ற காலத்தே, நஞ்சுற்றமெல்லாம் எஃகமேந்திப் புலிக்குழாம்போலேசீறிச் சாதற்கொருப்பட்டுத்தோன்றுமியல்பை அங்கரிற்கண்டேனென்க.

கச்சின், இன் - உவமப்பொரு. (ககஉ)

கண்டபினின்னைக்காண்பேன்கருவரையுலம்பிப்பல்கால்
விண்டுவுமுடையவாசின்வெடிததுராய்வெகுண்டுநோக்கி

யெண்டிசையோருமெள்கக்குஞ்சரமிரியப்பாயு
மொண்டிறற்சிங்கமன்னகதழொளியுடற்சிகண்டேன்.

கருவரையிற்சிகரமுமஞ்சியுடையும்படி வாலினாலே பல்காலும்வீசி வெகுண்டு பரந்துநோக்கி எண்டிசையோருமச்சங்கூரும்படி குஞ்சரத்தைக் கெடப்பாயுஞ் சிங்க மென்க; "பழிவந்து மூடுமென் றெள்குதும்" என்றாற்போல. அஃகவும்பாடம். கத ழொளி - மிக்கவொளி.

இ - ள். அவரைக்கண்டபின்பு நின்னைக்காணநின்றயான் சிங்கமன்ன நின் னுடற்சியைக் கண்டேனென்க

முன்பு அவன் சிங்கத்தையின்றி யெழுந்தேமென்றதற்கு நீ யபபுலித்திரனுக்குச் சிங்கமென்றானென்க. விண்டு - விகாரம். (ககூ)

சினந்தலைபெருக்கித்தீக்கோளுறுப்பினைச்சுருக்கித்தீப்போ
லனன்றுநில்லாதகண்ணுனிறுத்தினசெவியிற்றாகி
முனம்புகவடக்கிப்பின்போந்திருந்துபாய்வானமைந்த
வினந்தலைப்புலியோடொக்குந்தோழர்நின்னிடத்திற்கண்டேன்.

இ - ள். அதன்பின் சினத்தை யிடத்தேபெருக்கித் தீக்கோட்பாட்டையுடைய உறுப்புக்களைச்சுருக்கி யழன்று சுழல்கின்றகண்ணோடே நேரநிறுத்தினசெவியிற்றாய் உடம்பினைக்குறைத்துப் பின்போந்திருந்து முன்னேசெல்லப்பாய்தற்கிருந்த திரட்சி யை யிடத்தேயுடைய புலியோடொக்குந்தோழரை நின்னிடத்தேகண்டேனென்க.()

கூடநீர்நின்றபெற்றிகண்டிப்பானுக்குவேற்கோா
கேடகம்வாளொடேந்திக்கெடுகவிந்நகரமென்னு
மாடத்தினுச்சிநின்றமலைமகடன்மைகண்டே
யாடவாக்குழுவையொப்பாயஞ்சினேனதன்கணென்றான்.

இ - ள். நீர் அங்ஙனஞ்சேரநின்றதன்மைகண்டு தாதையார்கருத்தன்மையின், நம்மையேவாதே யிப்பக்கத்தைப்பாாப்பேன்பொருட்டுக் கெடுகவிந்நகரென்று ஏந்தி நின்ற தத்தைதன்மைகண்டு, புலியொப்பாய்! அந்நிலையிலே யஞ்சினேனென்றா னென்க.

"தாதை" முதல் இதனளவுமொருதொடர் (ககூ)

பெண்ணிடர்விடப்பவாழ்விற்சாதலேபெரிதுநன்றென்
றெண்ணினேனமாகளவீயுமியல்பினுனெருங்கபபட்டுக்
கண்ணிறைவியகன்றன்னைச்சிந்தித்தேன்கடவுள்வாழ்த்தி
யண்ணல்வந்தழுங்கதோன்றியாங்கென்னைக்கொண்டுபோந்தான்.

இ - ள். தன்மனையாள் தன்னிடரைநீக்க உயிர்வாழ்தலின், இறத்தல் மிகநன் றென்றெண்ணினேன்; எண்ணி நமககு ஒருசெயலின்றாககி நஞ்சுற்றமும் வீயும்வகை யோடே முன்செய்த தீவினை நெருங்கப்படுதலாலே, இந்நிலைக்கு இறைவனல்லது வேறொருவரின்றென்றுகருதி யிறைவனைவாழ்த்தி இயக்கனுச்சு யான்கூறியநிலை யைக்கைவிட்டுப் பின்னும் இயக்கன்றன்னையேநினைத்தேன்; அவன் வந்துதோன்றி அவ்விடத்தினின்றும் என்னைக்கொண்டுபோந்தானென்க.

